# மார்ச்சுக்கு முன் ஐந்து லக்ஷம்

## கட்சி பத்திரிகை வளர்ப்பதற்காக, தேர்தலை நடத்துவதற்காக......,


# ஜனசக்தி

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி தமிழ்நாட்டுக் கமிட்டியின் வாரப் பத்திரிகை

மலர் 4. இதழ் 6. | புதன்கிழமை 7—11—45 | விலை 2 அணா


**கட்சி அங்கத்தினர்களே! கட்சியின் நண்பர்களே!**

*உங்களைக் கேட்கிறேன்; மத்தியக் கமிட்டியின் சார்பாக வேண்டிக்கொள்கிறேன். குறைந்த காலத்தில் ஐந்து லக்ஷ ரூபாய் நிதி திரட்டியாகவேண்டும். உங்கள் நன்கொடையைக் கொடுங்கள்; மற்றவர்களிடம் நன்கொடைகளை வாங்குங்கள். ரொம்பக் குறைந்த காலத்தில் இவ்வியக்கத்தை வெற்றிகரமாக முடித்துத் தரும்படி வேண்டிக்கொள்கிறேன்.*

தேசிய இயக்கத்திற்காக நம் இளமை முழுவதையும் நாம் அர்ப்பணம் செய்திருக்கிறோம். அதன் வெற்றிக்காகத் தளராது அல்லும் பகலும் உழைக்கிறோம். கம்யூனிஸ்டுகளாகிய நம்மால் மட்டும்தான் நாம் உழைப்பதுபோல் உழைக்க முடியும். ஆதலின் அவ்வியக்கத்தின் போக்கிலே இன்று நிகழும் நிகழ்ச்சிகளைக் கண்டு உங்கள் மனம் விம்முகிறது; துயரம் தொண்டையை அடைக்கிறது.

நாம் நம் கட்சியை நேசிக்கிறோம்; அதன்மீது அளவற்ற பாசம் கொண்டிருக்கிறோம். கம்யூனிஸ்டுகளாகிய நம்மால் மட்டும்தான் நாம் நேசிப்பதுபோல் கட்சியை நேசிக்க முடியும். ஆதலால், நம் கட்சியைப் பற்றி கண்டபடியெல்லாம் திட்டி அவதூறுகள் கூறப்படுவதை பார்க்கும் உங்களுக்கு நெஞ்சு குமுறுகிறது; ஆத்திரம் பொங்குகிறது.

நாம் கம்யூனிஸ்டுகள். தேசத்திற்கு ஏற்படும் இன்னல்களைக் கண்டு கலங்கி வருந்துவதல்ல நம் தொழில்; பேதளித்து உட்கார்ந்திருப்பதல்ல நம் வேலை. நம் கடமை வேறு. நம் சகோதரர்களிடமுள்ள மேன்மையான குணங்களை, நல்லொழுக்க உணர்ச்சிகளைத் தட்டி எழுப்ப கஷ்டப்பட்டு உழைப்பது நம் கடமை. அதன்மூலம் தீயகுண சக்திகளை, பேராசைப் பேய்களை, இருள் உலகத்துக் காட்டேறிகளை வெளிச்சத்திற்குக் கொண்டுவந்து அம்பலப்படுத்துவதற்காக சளைக்காமல் பாடுபடுவது நம் பணி. சுற்றி முற்றிலும் பார்த்து வகையறியாது தத்தளித்து நிற்பவர்கள் அல்ல நாம். சிற்றெறும்புபோல் உழைத்துப் போராடும் போர்வீரர்கள் நாம்!

நம் சகோதர தேசபக்தர்களில் சிலர் நிதானப் புத்தியை இழந்து விடுகிறார்கள்; அதனால் நாமும் நம் புத்தியையும் இழந்துவிட வேண்டியதில்லை. நாம் கம்யூனிஸ்டுகள்; நமக்கு அந்தப் பழக்கம் இல்லை. நம் மீது கேவலமான முறையில் அவதூறுகளைப் பரப்புகிறார்கள். அவர்களுக்கு எதிராக நம் ஜனங்களின் மனச்சாட்சியை நாம் தட்டி எழுப்பிவிட வேண்டும். அவதூறுகளைப் பரப்புவதும், ரௌடித்தனம் செய்வதும் ஜனநாயகத்திற்கு விரோதமானவை. நம் நாட்டின் அரசியலில் அவை சகஜம் என்ற நிலைமை ஏற்பட்டால், அந்த நிலைமைக்கு பொதுஜனங்கள் உட்பட்டிருப்பார்களேயானால், "இந்தியாவில் ஜனநாயகம் இன்னும் பரிபூர்ண ஜீவிய சக்தி பெறவில்லை. பிறக்கும்பொழுது ஜீவனற்றதாகிவிட்டது" என்றே கொள்ளல்வேண்டும். இதனால் நம் கட்சிதான் ரொம்ப அதிகமாகத் துன்பத்தை அனுபவிக்க நேரிடும்.

உண்மையை அஸ்திவாரமாகக் கொண்டது கம்யூனிஸம். அதனால் நம் மீது அவதூறுகளைப் பரப்புகிறவர்களை எதிர்க்க நாமும் அத்தகைய அவதூறுகளையே ஆயுதமாகக் கொள்ளக்கூடாது. நாம் அவதூறு பிரசாரத்தின் எதிரிகள்.

நம்முடைய போராட்டம் சுதந்திரத்தை அடைவதற்கான போராட்டம்; உண்மையான ஜனநாயகத்தை ஸ்தாபிப்பதற்கான போராட்டம். இந்தப் போராட்டத்தில் நமக்கு எதிராக போலீசாரும், முதலாளிகளின் கைக் கூலிகளும், ஜமீன்தார்களின் ஏஜெண்டுகளும் ரௌடித்தனத்தைக் கையாள்கின்றனர்; மறைந்திருந்து நம்மைத் தாக்குகின்றனர்; கூட்டங்களைக் கலைக்கின்றனர். இந்தப் பாடத்தை நாம் திருப்பிப் படிக்கக்கூடாது. நம்மைக் கண்டிக்கிறவர்களுக்கு எதிராக, நம் கொள்கையில் குறை கூறுபவர்களுக்கு எதிராக, நம் அரசியல் எதிரிகளுக்கு எதிராக நாமும் ரௌடித்தனத்தில் இறங்கக்கூடாது. காலாடித்தனத்தை எதிர்க்க நாமே ரௌடித்தனம் செய்யக்கூடாது. ரௌடித்தனத்திற்கு நாம் எதிரிகள்!

★

### ஒற்றுமைப் போருக்காக

வருகிற தேர்தலில் ஒவ்வொரு கட்சியும் தன்னுடைய வாழ்விற்காகப் போராடப்போகிறது; ஜனங்களிடம் ஆதரவு தேடி மற்ற கட்சிகளை எதிர்த்துப் போராடப்போகிறது. மற்ற கட்சிகளைப்போலல்ல நம் கட்சி. "தேசபக்தியும் நியாயமும் நமக்கே சொந்தம்; வேறு யாருக்கும் கிடையாது" என்று நம் கட்சி கூறவில்லை. மற்றவர்களிடமும் தேசபக்தியுண்டு; நியாயமுண்டு. நம் பரந்த தேசத்தில் வாழும் சகல ஜனங்களும் உண்மையான சுதந்திரத்தை வாழ்க்கையில் காணுவதையும், உண்மையான நியாயத்தையும் அஸ்திவாரமாகக் கொண்டு, தேசபக்தியுள்ள சக்திகள் யாவும் ஒன்றுபட்டாலொழிய இந்த நாடு விமோசனமடைய வேறு வழியில்லை என்று நம் கட்சி ஒன்றுதான் நினைக்கிறது.

ஆகவே நம் வேலை ரொம்ப கடினமானது. மற்றவர்கள் ஒருவரையொருவர் எதிர்த்துக் 'கட்சி [redacted] கட்டு'வதில் மேலும்மேலும் [redacted] முனைவார்களேயானால், [redacted] நாம் இன்னும் அதிகமாகத் [redacted] தளராத ஊக்கத்துடன் [redacted] உழைத்து, தேசபக்தியுள்ள [redacted] கட்சிகளிடையே ஒற்றுமை[redacted]யைக் கட்டும்வீரர்களாக [redacted] வேண்டும்.

நம் தேசிய வாழ்வு ஒரு [redacted] குறிப்பிட்ட கட்டத்தை [redacted] அடைந்திருக்கிறது. இந்தக் [redacted] கட்டத்திலிருந்து முன்னே[redacted]றலாம்; அல்லது பின்னேற[redacted]லாம். எந்தப் பக்கம் திரும்[redacted]பப்போகிறது என்பதே [redacted] கேள்வி. ஆதலின் இப்[redacted]பொழுது எழுந்துள்ள [redacted] பிரச்னை ரொம்ப சாதாரண[redacted]மானது.

ஒருவரையொருவர் [redacted] எதிர்த்து நாளுக்கு நாள் [redacted] வளர்ந்துவரும் 'கட்சிக் [redacted] கட்டும்' மனப்பான்மை [redacted] பொதுவான தேசபக்தி[redacted]யைப் பற்றியுள்ள எண்ணங்களையெல்லாம் அழிக்கப் போகிறதா? இந்திய சுதந்திரத்திற்காகப் பொதுவான ஐக்கிய முன்னணி சமீபத்தில் ஏற்படும் என்ற நம்பிக்கைகளையெல்லாம் ஒழிக்கப்போகிறதா?

நம் கட்சி மற்ற கட்சிகளைவிட வயதில் சிறியது. நாம் கூறுவது ஜனங்கள் செவிக்கு எட்டுவதற்காகவும், அவதூறு பேசுபவர்களின் வாயை அடைக்கவும் இத்தேர்தலில் நம் கட்சி போட்டியிடுகிறது. இது நம் கட்சிக்கு ஜீவ மரணப் போராட்டம். எத்தகைய அபாயம் எதிர்நோக்கியிருக்கிறதென்பதை நம் கட்சித் தோழர்களெல்லோரும் உணர்வார்களாக!

- நம்மைப் பின்பற்றக்கூடிய ஜனங்களெல்லோரையும் நம் கட்சியின் ஒற்றுமைக் கொள்கைக்கு ஆதரவாக நாம் தட்டி எழுப்புவோமா? அதன் மூலம், "ஒற்றுமையை விரும்பி நேசிக்கும் ஜனங்கள் மடியாமல் இன்னும் இந்த நாட்டில் இருக்கிறார்கள்" என்பதை, காங்கிரஸ் ஜனங்களும், லீக் ஜனங்களும் பார்க்கும்படி செய்வோமா? 'கட்சிக் கட்டி'க் கொண்டு ஒருவரையொருவர் எதிர்த்து சண்டை பிடித்துக்கொண்டு நிற்கும்படி அந்த ஜனங்களை யாராலும், எந்த விதத்திலும் தூண்டமுடியாது என்பதை காங்கிரஸ்-லீக் ஜனங்கள் பார்க்கும்படி செய்வோமா?
- நம்மை ஆதரிக்கும் ஜனங்கள் அவ்வளவு பேரையும் தட்டி எழுப்பி மற்றவர்மீது அவதூறு கூறுமல், நம் கட்சிக் கொள்கையை ரொம்ப சுலபமாகவும் தெளிவாகவும் விளக்கிப் பிரசாரம் செய்து மூன்று மாதங்களுக்கு வெற்றிகரமாக ஒரு இயக்கத்தை நாம் நடத்துவோமா? கம்யூனிஸ்டுகள் மீது அவதூறுகள் கூறும் கூட்டம் நடுங்கி ஒட்டமெடுக்கச் செய்யக்கூடிய தன்மைபெற்ற மிகப் பெரிய ஜனநாயக எழுச்சி நம் அபேக்ஷகர்களை ஆதரித்துத் தோன்றுவதற்கு ஏற்ற வகையில் இந்தஇயக்கத்தைநடத்துவோமா?

சுருக்கமாகக் கூறவேண்டுமானால், ரொம்பக் கஷ்டமான காலமாக இருந்தபோதிலும், எத்தகைய இடைஞ்சல்கள் வந்தபோதிலும், எல்லாவற்றையும் சமாளித்துத் தன் சொந்த ஜனங்களிடையே ஒரு சுதந்திர அரசியல் சக்தியாக நம் கட்சி இயங்குமா? தன் சொந்தக் கால்களை ஊன்றி நம் கட்சி நடந்து செல்லுமா?

நாம் ஒவ்வொருவரும் இப்பொழுது ரொம்ப வேலைகளைச் செய்ய வேண்டியிருக்கிறது; சகஜமாகச் செய்யக்கூடிய வேலைகளைவிட பன்மடங்கு அதிகமாகச் செய்யவேண்டியிருக்கிறது. கட்சியின் பத்திரிகைகளைப் பெரிதாக்கவும், பிரசுரங்களை [redacted] அதிகரிக்கவும், இயக்கத்தை நடத்தவும், முன்பு என்றைக்கும் வேண்டியிருந்ததைவிட இன்று கட்சிக்குப் பணம் அவசர அவசியத் தேவையாக இருக்கிறது.

தினசரி பத்திரிகைகள் ஆரம்பிக்க நம் கட்சி ரொம்ப கஷ்டப்பட்டு முயற்சித்து வருகிறது. இம்முயற்சிகளை வீணாக்க தன்னால் முடிந்ததையெல்லாம் சர்க்கார் செய்கிறது. என்னதான் நேர்ந்த போதிலும், முன்பு எப்பொழுதும் வெளியிட்டதைவிட அதிகமாக இப்பொழுது பிரசாரப் பிரசுரங்களை நாம் வெளிகொண்டு வருவோம்.

காகிதம் வாங்குவதற்கும், அச்சடித்துத் தருபவர்களுக்குக் கூலி கொடுப்பதற்கும் நமக்குப் பணம் வேண்டும்.

அந்தந்த ஸ்தலங்களில் இயக்கத்தை நடத்த மற்றவர்கள் செலவழிக்கும் பணத்தைவிட ரொம்பக் குறைவாகவே நாம் செலவு செய்வோம். எனினும், இந்தக் குறைந்த செலவே முன்பு என்றைக்கும் நாம் செலவழித்ததைவிட அதிகமாக இருக்கும். நம் ஊழியர்களுக்கு உணவளிக்க வேண்டும்; போக்குவரத்து சாதனங்களுக்கு பணம் கொடுக்க வேண்டும். ஒவ்வொரு தொகுதிக்கும் குறைந்தது ஒரு ஒலிபெருக்கியாவது விலைக்கு வாங்கியாகவேண்டும்.

அதனால்தான் இந்த வேண்டுகோள். உங்களிடமிருந்தும், நீங்கள் சேவை செய்திருக்கும் ஜனங்களிடமிருந்தும் எவ்வளவு அதிகமாக நிதியைப் பெற முடியுமோ அவ்வளவையும் திரட்டுவதற்காகத்தான் இந்த வேண்டுகோள்.

கட்சி அனுதாபிகளைக் கேட்டுக் கொள்கிறோம்; நீங்கள் கொடுக்கக்கூடிய தொகையில், எவ்வளவு அதிகமாகக் கொடுக்க முடியுமோ, அதை நவம்பர் மாதத்திலேயே கொடுத்து விடுங்கள். நிதியை உங்கள் இஷ்டப்படி எத்தனை வாய்தாக்களில் தரமுடியுமோ, அப்படியே கொடுங்கள்.

★

### கட்சி அங்கத்தினர்களே!

கட்சி அங்கத்தினர் ஒவ்வொருவரும் கட்டாயம் கீழ்க் கண்டபடி செய்யவேண்டும்:—

- முழு நேர ஊழியர்கள் வழி காட்டவேண்டும். ஏற்கனவேயே மிகவும் குறைவாக இருக்கும் கட்சி சம்பளத்தில் மிச்சம்பிடித்து மாதா மாதம் கட்சி நிதிக்கு அதை அளிப்பதாக ஒவ்வொருவரும் பிரதிக்ஞை எடுக்கவேண்டும்.
- நம் அனுதாபிகளும். கட்சி மிலிடெண்ட்களும் பின்பற்றுவதற்கு உதாரணமாக கட்சி அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் திகழ வேண்டும். தங்களால் எவ்வளவு அதிகமாகக் கொடுக்க முடியுமோ அவ்வளவையும் கொடுக்கவேண்டும்.
- ஒவ்வொருதொழிலாளியும் குமாஸ்தாவும் குறைந்தபக்ஷம் ஒவ்வொரு மாதமும் ஒருநாள் சம்பளத்தைத் தரவேண்டும்.
- அறுவடை முடிந்தவுடன் தன் கோட்டாவைப் பூர்த்தி செய்வதாக ஒவ்வொரு விவசாயி தோழரும் பிரதிக்ஞை எடுக்க வேண்டும்.
- கட்சிக்கு வெளியிலுள்ளவர்களிடமிருந்து, குறைந்த பக்ஷம் நான்கு பேர்களிடமிருந்து மாதா மாதம் ஒவ்வொரு கட்சி அங்கத்தினரும் நன்கொடைவாங்கிவரவேண்டும்.

இந்தத் தடவை நீங்கள்மட்டும் பணம் கொடுப்பதில் பயனில்லை; கட்சி மிலிடெண்ட்களிடமிருந்து மட்டும் வாங்குவதிலும் பிரயோஜனமில்லை. நம்மைப் பின்பற்றக்கூடிய ஜனங்கள் அவ்வளவு பேரையும் கட்சி நிதிக்கு பணம் கொடுக்கும்படி செய்யவேண்டும். இவ்விதம் தேர்தல் நடப்பதற்கு வெகு நாட்கள் முன்னதாகவே அவர்களுடைய ஓட்டுகளைப் பெறவேண்டும்.

★

### தொழிலாளி சகோதரர்களே!

உங்களுடைய தொழிற் சங்கங்களைக் கட்டி வளர்த்த கட்சி, உங்களுடைய புத்திரர்களுக்கு அரசியல் போதித்துத் தலைவர்களாகவும், ஆர்கனைசர்களாகவுமாக்கியக் கட்சி, இன்று உங்களுடைய ஆதரவைக் கேட்கிறது.

நீங்கள்தான் உண்மையில் உற்பத்தி செய்பவர்கள். தொழிற்சாலைகளை நிர்வகிப்பதில் உங்களுக்குத்தான் பிரதான அதிகாரம் இருக்க வேண்டும்; கொள்ளை லாபக்காரர்களுக்கல்ல. சுதந்திர இந்தியாவில் இதை நடைமுறையில் காண பிரதிக்ஞை எடுத்திருக்கும் கட்சி, நம் கட்சி.

இப்பொழுது வேலையில்லாத்திண்டாட்டம் நாடெங்கும் தொழிலாளரை பயமுறுத்திக் கொண்டிருக்கிறது. இதை எதிர்த்து மகத்தான வேலை நிறுத்தப் போராட்டங்களை நடத்துவது நம் கட்சி.

உங்களுடைய வேலைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும்படியான உருப்படியான திட்டங்களை இக்கட்சியின் அபேட்சகர்கள்தான் சட்டசபைகளில் முன் வைத்து வாதிப்பார்கள். ஜனங்களுக்கு அதிகப் பண்டங்களையும், உங்களுக்குத் தேவையான வாழ்க்கை வசதியையும் அளிப்பதற்கும், முதலாளிகளுக்கு குறைந்த லாபம் கிடைப்பதற்கும் உத்திரவாதம் செய்கிற திட்டங்களை நிறைவேற்றப் போராடுவார்கள்.

- கட்சியின் கூட்டங்களுக்கு வாருங்கள்; நீங்களே எல்லாவற்றையும் கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள்.
- உங்களுடைய தொழிற்சங்கங்களில் அங்கத்தினர்களாகச் சேருங்கள். வருகிற போராட்டங்களுக்குத் தயார்படுத்திக் கொள்ளுங்கள்.
- உங்களால் கொடுக்க முடிந்ததை ஒவ்வொரு மாதமும் கட்சி நிதிக்குக் கொடுங்கள்; உங்களுடைய கொடிக்கு செலுத்தவேண்டிய காணிக்கையைச் செலுத்துங்கள்; உங்கள் தலைவர்கள் மீது உள்ள நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்து நிரூபியுங்கள்.

★

### விவசாய சகோதரர்களே!

எட்டு லட்சம் பேரைக் கொண்ட மகத்தான அகில இந்தியக் கிஸான் சபையைக் கட்டியிருக்கும் கட்சி, புதிய கிராமங்களை அமைப்பவர்களாகவும், கிராமத்திலுள்ள ஒடுக்கிச் சுரண்டும் கூட்டத்தினரை எதிர்த்துப் போராடுபவர்களாகவும் உங்களுடைய புத்திரர்களையும், புத்திரிகளையும் பழக்கியிருக்கும் கட்சி, இன்று உங்களுடைய ஆதரவைக் கேட்கிறது. சுதந்திர இந்தியாவில் கிராமத்தை நிர்வகிப்பவர்கள் கிராமப் பாட்டாளிகளாக இருக்க வேண்டுமென்று பிரதிக்ஞை எடுத்திருக்கிறது இக்கட்சி.

நிலப்பிரபுத்வ அட்டைகளின், சுயநலப் பேய் பிடித்த வட்டிக்கடைக்காரர்களின், பேராசைப் பிடித்த கள்ளச் சேமிப்பாளர்களின் பயங்கரப் பிடியை இப்பொழுதே அடித்து உடைத்தெறிய கட்சி கஷ்டப்பட்டு பாடுபடுகிறது.

பஞ்ச காலத்திலும், அதற்குப் பிறகும் எவ்வளவு கஷ்டங்களுக்கிடையே உறுதி குலையாமல் எந்தக் கட்சி தங்களுடன் சதா சர்வகாலமும் நின்றுகொண்டிருந்தது என்பதை வங்காளத்து விவசாயி நினைவுபடுத்திக்கொள்ளட்டும்.

தன்னுடைய சொந்த வீட்டிலே தன்னுடைய நன்மைக்காக என்னென்ன மாறுதல்களை செங்கொடி ஏற்படுத்தியிருக்கிறது என்று ஆந்திர தேசத்து விவசாயி நினைவுபடுத்திக்கொள்ளட்டும்.

தன்னுடைய கையூர் புத்திரர்களின் கட்சி என்பதை, ஆயுள் தண்டனையை அனுபவித்துவரும் கே. பி. ஆர். கோபாலன் முதலிய பதினறு இளம் போர்வீரர்களின் கட்சி என்பதை, கேரளநாட்டு விவசாயிகள் மறக்காமல் இருப்பார்களாக!

எங்கள் கட்சியிலுள்ள முதியவர்களிடையே பாபா அகாலிகளும், கெதர்பார்டியின் ஸ்தாபகர்களுமான வெண்ணிற தாடிகளைக் கொண்ட பாபாக்கள் இருக்கிறார்கள் என்பதை பாஞ்சால விவசாயிகள் ஞாபகப்படுத்திகொள்ளட்டும். இன்றைய இளம் வாலிப ஆர்கனைசர்களெல்லோரும், தோபாவிலும், மஞ்சாவிலும் வளர்ந்த உணர்ச்சி மிக்க விவசாயி வாலிபர்கள் என்பதைப் பாஞ்சால விவசாயி மறக்க வேண்டாம்.

- கட்சியின் கூட்டங்களுக்கு

(12-ம் பக்கம் பார்க்க)

## கம்யூனிஸ்டு கட்சி நிதி கோருகிறது!

"ஜனசக்தி"

தனிப்பிரதி விலை அணா 0-2-0.

1 வருட சந்தா ரூ. 5-0-0. 6 மாதம் ரூ. 3-0-0. 3 மாதம் ரூ. 1-8-0

# சிந்தித்துப் பார்ப்பார்களா?

மகாத்மா காந்தி ஸ்ரீ கோபாலசாமிக்கு எழுதிய கடிதத்தில், "ராஜாஜி 'துரோகமிழைத்ததாகக் குற்றம் சாட்டுவது அறியாமை. அவர் ரொம்பவும் நல்லவர், கேவலமான எதையும் செய்யக்கூடியவரல்ல" என்று எழுதியுள்ளார்.

**ப. ஜீவானந்தம்**

ராஜாஜி ஆகஸ்ட் தீர்மானத்தின் போராட்ட பகுதியை எதிர்த்தார்; ஆகஸ்டு 'புரட்சியில்' கலந்துகொள்ளவில்லை. கலகத்தின் போக்கை குறை சொன்னார். அத்தகைய ராஜாஜியை துரோகி என்று சொல்வது மடத்தனம் என்கிறார் மகாத்மா. ஆகவே, ஆகஸ்டு தீர்மானத்திற்கு விரோதியாயிருந்ததாலேயே ஆகஸ்டுப் போராட்டத்தில்' கலந்துகொள்ளாததாலேயே அன்றையப் போராட்டப் போக்கை குறை கூறியதாலேயே ஒருவர் தேசத்துரோகியாகிவிட்டார் என்று சொல்லமுடியாதென்பது காந்திஜியின் தீர்ப்பு. இதைக் காந்தி பக்தர்களும் காங்கிரஸ் தேச பக்தர்களும் நன்ருகச் சிந்தித்துப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிருர்கள்.

ஆகஸ்டுக் கலகத்தின்போது, சர்க்கார் அடக்குமுறை அக்ரமமென்றும் ஜனங்களின் போக்கு தவருனதென்றும் சொல்லிவிட்டு நிறுத்திக்கொண்டார் ராஜாஜி. அரசாங்கத்தின் அடக்குமுறை கடிவாளமற்ற பேய்க்குதிரைப் பாய்ச்சலில் குதித்துப் பாய்ந்துகொண்டிருக்கையில், ஆத்திரங்கொண்ட பொது மக்கள், நிதானமிழந்து, காந்திஜியின் பாஷையில் 'தன்னடக்கத்தை மீறி' என்ன செய்கிரேமென்பதை உணராமல் பல விபரீத நாசச் செயல்களில் ஈடுபட்டிருக்கும் காலத்தில், காந்திஜியின் பெயரையும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி பெயரையும் உபயோகித்து, காங்கிரஸ் சோஷியலிஸ்டுகளும் பார்வார்டு பிளாக்கிஸ்டுகளும் நாச வேலைக்கு தூண்டியகாலத்தில், பொறுப்புள்ள அரசியல் ஊழியர்கள், கைகட்டிக் கொட்டாவி விட்டுக்கொண்டு சும்மா இருக்க முடியாது; இருக்கமாட்டார்கள். இருக்கக்கூடாது.

## பொதுமக்கள் மத்தியிலே

கம்யூனிஸ்ட்களாகிய நாங்கள் அதிகாரவர்க்கத்தின் அடக்குமுறை போராட்டத்திற்கும் பொதுமக்களின் அத்துமீறிய எழுச்சிக்குக் இடையில் வந்து நின்ரேம். சர்க்காரின் பொறுப்பற்றத்தனமான அடக்குமுறையை முழுமூச்சுடன் எதிர்த்தோம். காங்கிரஸை, பாஸிஸ்டு ஸ்தாபனமாக உலகத்தார் பார்வையில் பொய் சித்திரம் தீட்டிக் காட்ட அரசாங்கம் எடுத்துக் கொண்ட இழிவான முயற்சிகளை பொடிபொடியாக்கி, காங்கிரஸின் பாஸிஸ எதிர்ப்புக் கொள்கையை உலகறிய இடைவிடாது பாடுபட்டோம். பொது மக்களிடையில் கொழுந்து விட்டெரிந்த ஆத்திர ஜ்வாலையைத் தணிக்கப் பகிரதப் பிரயத்தனம் செய்தோம். காங்கிரஸின் அறுபது வருஷ பாரம்பரியத்தை பொது மக்களுக்கு ஞாபக மூட்டி, தெளிவான அரசியல் உணர்ச்சியில் பிறழாது நின்று, தேசத்திற்கு — ஏகாதிபத்தியத்திற்கல்ல—நாசம் விளைக்கும் எந்தக் காரியத்திலும் இறங்காமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டோம். ஏகாதிபத்தியத்தின்மீது ஏற்பட்டிருக்கும் அக்ர[redacted] ஆவேசம், அரசியல் [redacted] மறைத்து, ஜாப் ஏஜ[redacted] பசப்பு வார்த்தைகளுக்கு—இன்றும் காங்கிரஸ் முகாமில் ஜப்பானின் தோல்விக்கு ஒப்பாரி வைக்கிறவர்கள் இருக்கிருர்கள்—ஏமாறவேண்டாமென்று எச்சரிக்கை செய்தோம்.

## தியாகம் செய்தோம்

காங்கிரஸ் பாரம்பரியத்தைக்காக்கவும் அரசாங்க அடக்குமுறையை எதிர்க்கவும், தன்னடக்கத்தை மீறியெழுந்த பொதுமக்களின் ஆவேசப் புயலைத் தணிக்கவும் சர்க்காருக்கும் ஜனங்களுக்கும் மத்தியில்நின்ற எங்கள் தோழர்கள் எல்லாவித தியாக அக்னிகளிலும் குதித்துள்ளார்கள். அஹமதாபாத்தில் எங்கள் ஆருயிர்த் தோழர் உமாபாய்காடியா ஏமரி அவிழ்த்துவிட்ட போலீஸ் அடக்குமுறைக்கும் ஆத்திரங்கொண்ட பொதுமக்களுக்கும் நடுவில் நின்றதால், போலீஸ் குண்டு, மார்பில்பாய உயிர் நீத்தார். மதுரை, திருநெல்வேலி, திருச்சி, கும்பகோணம் முதலிய தமிழ்நாட்டின் பல பாகங்களிலும் எங்கள் தோழர்கள் அரசியல் தெளிவு நேர்வழிகாட்ட, தேசபக்தி பிடரி பிடித்து உந்த சர்க்காரின் அடக்குமுறை அட்டகாசத்தைத் தடுக்கவும், ஜனங்களின் ஆத்திர ஆவேசத்தை தணிக்கவும் முன்வந்தால் போலீஸ் பாருத்தடிகளுக்கு இரையானுர்கள். சிறைச்சாலைகளுக்கும் எத்தனையோ தோழர்கள் செல்லவேண்டி நேர்ந்தது.

காந்திஜியின் தீர்ப்பில் ராஜாஜி துரோகி அல்ல; நல்லவர்; கேவலமான எதையும் செய்பவரல்ல, ஆனல் நாங்களோ.........?

கம்யூனிஸ்ட்கள் துரோகிகள் என்று சில 'ஆகஸ்ட் தலைவர்கள்' இழிவுப் பிரசாரம் செய்துவருகின்றனர். [redacted]

தலையங்கம்

# புரட்சி தின பிரதிக்ஞை

இருபத்தெட்டு வருடங்களுக்கு முன்னல் நிகழ்ந்த ரஷ்யப் புரட்சி மனிதவர்க்கத்துக்கே மகத்தான மாறுதலைச் சிருஷ்டித்தது. பத்தொன்பதாம் நூற்ருண்டில் நடந்த பிரெஞ்சுப் புரட்சி நிலப்பிரபுத்துவ முறைக்குச் சாவுமணியடித்தது. அடிமை விவசாயிகளை விடுவித்து, உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சிக்கு அடிகோலியது. அதேபோல, இருபதாம் நூற்ருண்டில், ரஷ்யப் புரட்சி லாபவேட்டையை குறிக்கோளாகக்கொண்ட முதலாளித்வ முறைக்கு சாவுமணியடித்து, சோஷலிஸ சமுதாயத்தைச் சிருஷ்டித்தது. உலகப் பொதுமக்களின் சுதந்திரப் போராட்டத்தில் அது ஒரு சகாப்தகரமான சம்பவம்; ஜார் என்ற கொடுங்கோலனின் சிறையிலடைபட்டுக் கிடந்த பல்வேறு தேசமக்கள் விடுதலை பெற்று, சம அந்தஸ்தில் ஒன்றுபட்டு, ஒரு மகத்தான சோஷலிஸ்ட் குடும்பமாக மலர்ந்துவிட்டனர். அதுமட்டுமல்ல, இதர தத்துவங்களைக் காட்டிலும் மார்க்ஸீஸமே மேலானதென்பதையும், கம்யூனிஸ்ட் கட்சி அதை எதிர்ப்பவர்களைவிட, பழிப்பவர்களைவிட, உயர்ந்ததென்பதையும் ரஷ்யப் புரட்சி நிரூபித்துவிட்டது.

இருபத்தெட்டு வருடங்களுக்கு முன் பிறந்த சோவியத் யூனியன் செழித்து வளர்ந்து வருவதுடன், நவீன உலகத்தின் நடு நாயகமாகவும் முதல்தரமான வல்லரசாகவும் பரிணமித்துவிட்டது. சோவியத் மக்களின் தார்மீக பலத்துக்கும், சோவியத் அரசியல் அமைப்பின் உறுதிக்கும், ஸ்திரத்திற்கும் சோவியத் செஞ்சேனையின் சக்திக்கும் ஈடுமில்லை, ஜோடியுமில்லை. தன்மீது ஏவப்படும் எந்த சக்தியையும் எதிர்த்து நிர்மூலம் செய்யமுடியுமென்பதை சோவியத் யூனியன் எடுத்துக் காட்டிவிட்டது. வீறுகொண்டெழுந்து விடுதலைப் போராட்டம் நடத்தும் அடிமைநாட்டு மக்களின் ஆருயிர்த் துணைவன் என்பதையும் நிரூபித்துவிட்டது. அணுகுண்டு மிரட்டல்களுக்கு அஞ்சி கொள்கைப் பிடிப்பை தளர்த்தும் குணம் தொழிலாளர்களுடையதல்லவென்பதை உலகு அறியச் செய்துவிட்டது. இந்தியாவின் பரிபூரண சுதந்திரக் கோரிக்கையையும், இந்தோனேஷிய, இந்தோசீன, பர்மிய, மலேய மக்களின் சுதந்திரத்தையும் ஆதரித்து இடையருது கிளர்ச்சி செய்துவருவதன் மூலம் சுதந்திர பிரேமிகளின் உறுதியான துணைவனென்ற முறையில் உலகத்தின் போற்றுதலுக்கு பாத்திரமாகிவிட்டது.

அதனல் உலகம் முழுவதிலுமுள்ள பாஸிஸ அனுதாபிகளும், [redacted]பத்தியவாதிகளும் ஜனநாயக விரோதிகளும் சோவியத் [redacted]ப் பிரசாரத்தை முழுமூச்சுடன் செய்கிருர்கள். ராய்ட்டர் [redacted] ஏகாதிபத்திய செய்தி ஸ்தாபனங்கள் இந்தப் பிரசாரக் [redacted]ளாக விளங்குகின்றன. இந்த நவம்பர் தினத்தில், நாம் [redacted]மக்களின் முன்னல், இந்த பிற்போக்காளர்களின் முகமூடி [redacted]கிழித்தெறிந்து, அவர்களை அம்பலப்படுத்துவோம். ரஷ்ய [redacted]ன் உயரிய உதாரணத்திலிருந்து கம்யூனிஸ்ட் கட்சி ஊக்கம் [redacted]றது. நமது சொந்த மக்களிடையே ரஷ்யா கற்றுக் [redacted]கும் படிப்பினைகளை போதிக்கிறது.

[redacted]நிர்ணய உரிமைக் கொள்கையைக் கடைப்பிடித்த [redacted]20 கோடி மக்களும் அசைக்க முடியாத ஒற்றுமையைக் [redacted]ருக்கிருர்களென்பதை நாம் இந்த நவம்பர் தினத்தில் நமது [redacted]க்கு ஞாபகமூட்டுவோம். எல்லோருக்கும் சுதந்திரத்தை [redacted]வாதம் செய்யக்கூடிய கொள்கைகளைக் குறித்து, நாம் நமக் [redacted]த்துப்போக முடியாவிட்டால், நமது விதி மாறப்போவ [redacted] அன்று ரஷ்யர்கள் ஜார் ஆட்சியிலிருந்து விடுபட முடியா [redacted]த்தார்களல்லவா? அதேபோல நாமும் பிரிட்டிஷ் ஆதிக் [redacted]ந்து ஒருபோதும் விடுபட முடியாமல் நிற்போம்.

[redacted]ந்த நவம்பர் தினத்தில், சோவியத் சகோதரர்களின் உன்னத [redacted]தாரணத்தைப் பின்பற்றி, தொழிற்சங்கங்களையும், கிசான் [redacted]ளையும் பலப்படுத்துமாறு நாம் நமது தொழிலாளி மக்களை [redacted]விவசாயி மக்களையும் தட்டி எழுப்பி ஊக்கமூட்டுவோம். [redacted]மூலம்தான், அவர்கள் நம் தேசத்தில் புதிய ஜனநாயக [redacted]ாதார அமைப்பை—தனி நபரின் லாபத்துக்கிடமில்லாத [redacted]ஜன தேவைகளைப் பூர்த்தி செய்வதையே லட்சியமாகக் கொண்ட பொருளாதார அமைப்பைக் கட்டும் பிரதம சிற்பிகளென்ற முறையில் தங்களுக்குரித்தான பங்கை நிறைவேற்ற முடியும்.

இன்றைய கிராம வாழ்க்கையை நிலப்பிரபுக்களும் பேராசை பிடித்த கள்ளச்சேமிப்பாளர்களும் அட்டைபோல் உறிஞ்சிக் கொண்டிருக்கிருர்கள். அடிமையிலும் கொத்தடிமையாய்க் காலம் தள்ளும் விவசாயிகள் சுகமின்றி, சுகாதாரமின்றி, உரிமையின்றி தவிக்கிருர்கள். இந்த நிலைமை மாறவேண்டும். நிலப்பிரபுத்வ முறைக்கும், கள்ளச்சேமிப்பு முறைக்கும் சாவுமணி யடிக்கவேண்டும். நிலம் தேசத்தின் சொத்தாகவேண்டும். தேச சொத்தான பூமியில் உழுது பயிரிட்டு, நம் நாட்டு மக்களுக்கு ஏராளமாக உற்பத்தி செய்வான் விவசாயி. ஆஸ்பத்திரிகளும், பள்ளிக்கூடங்களும், கலா நிலையங்களும் கிராமங்களில் ஏராளமாக தோன்ற வேண்டும். அத்தகைய கிராம வாழ்க்கையில்தான் அமைதியும் ஆனந்தமும் ஒற்றுமையும் மலரும். இந்தப் புதிய கிராமத்தைப் படைக்கும்படி விழிப்படைந்த விவசாயியை நாம் அறைகூவி அழைப்போம்.

கள்ளமார்க்கெட் காதகர்களையும் லாப வெறியர்களையும் எதிர்க்க, உரிமை வேட்கைகொண்ட தொழிலாளி மக்களுக்கு ஊக்கமூட்டுவோம். தேசத்தில் இயந்திரத் தொழில்கள் பெருக வேண்டும். எல்லாக் கேந்திரத் தொழில்களும் தேச சொத்தாக வேண்டும். இந்த இரு கோஷங்களையும் தொழிலாளிவர்க்கம் தன் போர்க்கொடியில் பொறிக்கும்.

துணி முதலிய பண்டங்களுக்கு திண்டாட்டமாயிருக்கிறது. பொதுமக்கள் "தேவை! தேவை!!" என்று கூவுகிருர்கள். இச்சமயத்தில் தன் சுயநலத்துக்காக, கொள்ளை லாபமடிப்பதற்காக சில வெறியர்கள் உற்பத்தியைக் குறைத்து, வேலையில்லாத் திண்டாட்டத்தை சிருஷ்டிக்க முயற்சிக்கிருர்கள். இந்த முயற்சிகளை முறியடிப்போமென்று 'நவம்பர் தினத்தில்' தொழிலாளிவர்க்கம் கோஷிக்கும். வேலையில்லா திண்டாட்டத்தையும் பண்ட நெருக்கடியையும் போக்க உடனடி தொழிலபிவிருத்திக்காக, இந்தியத் தொழிலாளிவர்க்கம் ஒவ்வொரு தொழிற்சங்க மூலமும் திட்டவட்டமான, உருப்படியான, காரியசாத்தியமான யோசனைகளைச் சமர்ப்பித்து, தொழிலாளிவர்க்கத்தின் திரண்ட பலத்தால் பொது மக்களின் பக்கபலத்தால், அந்த யோசனைகளை நிறைவேற்றப் பாடுபடும்.

---

பாகிஸ்தானை பூதமாக வர்ணித்து சீக்கியர்களை மிரளவைத்து சீக்கிய-முஸ்லிம் பிளவை அதிகப்படுத்தி வருகிருர். ஆனல் சீக்கிய-ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்காக விவசாயிகள் கிஸான் சபா தலைமையில் திரண்டெழுகின்றனர். சுயநிர்ணய உரிமை அடிப்படையில் லீக் விவசாயிகளும் சீக்கிய விவசாயிகளும் ஐக்கியமாகின்றனர். தன் நாட்டாண்மை பறிபோவதால் பதறுகிருர் பலே பலே பல்தேவ் சிங்!

# ★ தேசபக்த[redacted]

(தோழன்)

## தொழிலாளர் மகாநாடா?

காங்கிரஸ் மகா சபை பெயரால் நடக்கும் தொழிலாளர் தொண்டுக்கு 21-10-45ல் கடலூரில் நடந்த தென்னுற்காடு பஸ் தொழிலாளர்கள் மகாநாடு ஒரு உதாரணம்.

தலைமை வகித்த ஸ்ரீ முத்துராமலிங்க தேவர் சோவியத் எதிர்ப்பு, ஜாப் ஆதரிப்பு, ஆகஸ்டு புரட்சி, கம்யூனிஸ்டு எதிர்ப்பு அரசியலை போதித்தார். தொழிலாளர் பிரச்சினையைபற்றி பிரஸ்தாபமில்லை.

பின்னர் பேசிய கம்யூனிஸ்டு எதிர்ப்பு வாதிகள் லீக், ராஜாஜி கம்யூனிஸ்டுகள் எல்லோரையும் மனமாறத் திட்டினர்கள்.

ஸ்ரீ குருஸ்வாமி ஒருவர்தான் தொழிலாளர்களைப் பற்றிப் பேசினர். "காங்கிரஸ் காரராயிருந்தாலும், வேறு எந்த கட்சியினராயிருந்தாலும் தொழிற் சங்கங்களை பிளவு படுத்தக் கூடாது" என்று குறிப்பிட்டார்.

பஸ் தொழிலாளர்களுக்கு அவர்கள் மகாநாட்டில் ஒரு வேலையும் இல்லை. மேடையிலோ ஒரு தொழிலாளிகூட கிடையாது. வருடாந்திர அறிக்கையைக் காரியதரிசி படிக்கக்கூட நேரம் கொடுக்கவில்லையாம்! இருபது தீர்மானங்களை ஒரேமட்டாக சங்க குமாஸ்தா படித்தார். கம்யூனிஸ்டு எதிர்ப்பு பிரசங்கங்களில் காலம் கழிந்து விட்டபடியால், தீர்மானங்களை விவாதிக்க நேரமில்லை.

ஆனல் ஒரே ஒரு தீர்மானம் பிரரேபிக்கப்பட்டு, ஆமோதிக்கப் பட்டது. அதுவும் தொழிலாளிஒருவரும் பிரரேபிக்க வில்லை. அது தான் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியின் சார்பில் ஒரு வாரப்பத்திரிகை அல்லது தினசரி ஆரம்பிக்க வேண்டுமென்பது. இதைப்பற்றி பேசியவர்களும் கம்யூனிஸ்டுகளைத் தான் தாக்கினர்கள்! கம்யூனிஸ்டு எதிர்ப்புக்காக இன்னெரு காங்கிரஸ் பத்திரிகை வேண்டும் போலும்!

## காங்கிரஸ் பெயரால்!

இது தொழிலாளர் மகாநாடா அல்லது கம்யூனிஸ்டு எதிர்ப்பு 'அரசியல் மகாநாடா? தொழிலாளர்கள் பெயரில் மகாநாடு கூட்டி தொழிலாளர் பிரச்னை ஒன்றையும் விவாதிக்காது, கம்யூனிஸ்டு தூஷணை பிரசாரம் செய்வதுதான் தொழிலாளர் சேவையா? இது காங்கிரஸ் பெயரில் நடக்கிறது.

* * *

## டாட்டா பேசுகிரு[redacted]

இன்ஜின் முதல் வாசலை[redacted] வரை பல தொழில்களி[redacted] போட்டு கொழிக்கும் கோ[redacted] ஸ்ரீ ஜே. ஆர். டி. டாட்டா 1[redacted] நடந்த டாட்டா எண்ணைக்[redacted] யின் 27வது வருடாந்திர [redacted] தில் பேசியிருக்கிருர். கம்[redacted] 25 லட்ச ரூபாய் அதிக [redacted] ஆகியிருக்கிறதாம். ஆனல்[redacted] விலை அதிகமாகிவிட்டதாலு[redacted] கட்டுப்பாடுகளினல் லாப[redacted] துவிட்டதாலும் நிகர லாப[redacted] ந்துவிட்டதாம்! எவ்வள[redacted] யுமா? பங்குக்கு பங்கு வ[redacted] கள் குறைந்துவிட்டதாம்! [redacted] அழுகிருர்! (25-10-45. ஹிந்து)

* * *

## வஞ்சக சூழ்ச்சி

டாட்டா ரிப்போர்ட்டைப் படித்த என் நண்பர் ஒருவர் "பொதுஜன தேவையை முதன்மையாக மதித்து அரசாங்கம் முதலாளிகளின் லாபப் பேராசைக்கு கட்டுப்பாடு மூலம் கடிவாளம் போட்டுவிட்டதா?" என்று என்னைக் கேட்டார்.

வெளுத்ததெல்லாம் பாலென்று நினைக்கும் வெகுளி மனுஷன்! பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு முதலாளிகளென்ருல் ஒரு பிரத்தியேக பாசமுண்டென்பதை மறந்துவிட்டார். கட்டுப்பாடு விலையை நிர்ணயிக்கும்போதே முதலாளிக்கு நல்ல லாபம் கிடைக்கும்படிதான் அதிகாரவர்க்கம் செய்திருக்கிறது.

உதாரணமாக, டாட்டா கம்பெனிக்கு யுத்த முற்காலத்தில் மௌரா எண்ணெயில் 100 ரூபாய் லாபம் வந்திருந்தால், கட்டுப்பாட்டால் (கஷ்டப்பட்ட) சமயத்தில் 289 ரூபாய் லாபம் வந்திருக்கிறது! இதேபோல தேங்காய் எண்ணெயில் 219 சதவீத உபரி லாபம். கடலைக்கொட்டை எண்ணெயில் 189 சத வீத லாபம் இதுவும் அதே டாட்டா ரிப்போர்ட்டில் இருக்கிறது.

அரசாங்கம் நிர்ணய விலை செய்த அழகைப் பார்த்தீர்களா? கொள்ளை லாபமடிப்பதை சட்ட ரீதியாக்கி, அதை நிர்ணய விலை என்ருர்கள். ஆனல் ஆசைக்கோர் அளவில்லை. டாட்டாவுக்கு இதுவும் போதவில்லையாம். கட்டுப்பாடு ஒழிந்தால், வியாபார சாமர்த்தியத்தின் பெயரால் பொதுஜனங்களை இன்னும் அதிகமாக வஞ்சிக்கலாமே என்று அவர் நாக்கில் ஜலம் ஊறுகிறது! "கட்டுப்பாடு ஒழிக" என்று கோஷம் [redacted] தைக்கேட்டு, வயிறு புண்ணாகும்படி சிரிப்பார்கள்.

அவ்வளவுதூரம் சீக்கிய விவசாயிகளின் வெறுப்பையும் முஸ்லிம் விவசாயிகளின் வெறுப்பையும் சம்பாதித்துள்ள ஸ்ரீ பல்தேவ் ஸிங்தான் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குபின் பலமாக விளங்கும் யூனியனிஸ்ட் சர்க்காரில் விவசாய மந்திரி!

ஊர் இரண்டுபட்டால், இவரைப் போன்றவர்களுக்கு கொண்டாட்டம்தானே!

காங்கிரஸ் லீக் பிளவை பயன்படுத்திக்கொள்ள, காங்கிரஸ் தலைவர்களின் உதவியை நாடுகிருர்! லீக் எதிர்ப்பு பிரசங்கங்கள் செய்கிருர் தேசபக்தர் வேஷத்தில்! பத்திரிகைகளும் பத்தி பத்தியாய் பிரசுரிக்கின்றன!

* * *

## கரிசனம் கரை புரள்கிறது!

இதோடு, சென்ற வாரம் இன்னெரு அணுகுண்டையும் தூக்கிப் போட்டார் "முஸ்லிம் லீகின் அந்தரங்க ஆலோசனை கவுன்ஸில்களில் இந்திய கம்யூனிஸ்ட்கள் உயர்ந்த நம்பிக்கைக்கு பாத்திரமாகியிருப்பது எனக்கு விளங்கவில்லை (!). பல லீக் தலைவர்கள் கம்யூனிஸ்ட்களென்பது (!) ஜின்னுவுக்கும் அவர் நண்பர்களுக்கும் தெரிந்திருக்கவேண்டும்" என்று ஒரு அறிக்கைவிட்டார். லீக் ஒழிப்பு வீரருக்கு லீகின் பால் கரிசனம் கரை புரண்டோடுகிறது!

காங்கிரஸ் லீக் பிளவை விஸ்தரிப்பது இந்த ஏகாதிபத்திய தாஸரின் முதல் பணி.

கம்யூனிஸ்ட் பூச்சாண்டி காட்டி, லீகை பிளவுபடுத்துவது இவரது இரண்டாவது பணி.

* * *

# சண்டை சச்சரவற்ற ஒன்றுபட்ட கிராமம்

கிராமம் என்றால் ஏதாவது சண்டை சச்சரவில்லாமலிருக்காது. ஊரையே தன் ஆதிக்கத்தில் வைத்திருக்க ஆசைப்படும் பேர்வழிகள் சிலர் உண்டு. கோவிலுக்கு தர்மகர்த்தாவாக இருக்க சிலர் ஆசைப்படுவார்கள். ஊர் சொத்தை தன் கையில் வைத்துக் கொள்ள முயற்சிப்பவர்களும் உண்டு. இந்தப் பிரகிருதிகளெல்லாம் அநேகமாக இரத்தத்தை உறிஞ்சும் அட்டைகளாகவே இருப்பார்கள். மற்ற ஜனங்கள் தங்களைக் கண்டு நடுநடுங்கும்படியாகவும், தங்களைப் பார்த்தவுடன் வேஷ்டியை இடுப்பில் கட்டிக்கொண்டு, கைகட்டி வாய் பொத்தி நிற்கும்படியாகவும் நடந்துகொள்வார்கள்!

இந்தக் கிராமப் 'பெரிய மனுஷர்'களுக்கெல்லாம் கிஸான் சபை பயங்கர பூதமாக வந்திருக்கிறது. "என்னடா இது! சங்கமென்று சொல்லிக்கொண்டு எல்லாப் பயல்களும் ஒன்றும் சேர்ந்துவிட்டான்களே! எதற்கெடுத்தாலும் சங்கம் சொல்கிறபடிதான் நடப்போம் என்கிறான்களே! ஐயையோ! நம்மப் பேச்சுக்கு மதிப்பே இல்லையே!' என்று நினைத்தவுடன் அவர்களுக்கு ஆத்திரமாத்திரமாக வருகிறது.

ஒருவன் கோவில் தர்மகர்த்தா. அவன் வைத்தது சட்டம் கடவுளின் வீட்டில்! கடவுள்தான் எதையும் சாப்பிடுவதில்லையே! ஐயா சாப்பிடாததெல்லாம ஐயாவின் பிரதம காரியஸ்தர் வயிற்றிற்குள் தானே போகவேண்டும்? ஆகவே, சாமிப் பணத்தைச் சாப்பிடுவது சர்வசாதாரணம். யாருக்கும கணக்குக் கேட்க முடியாது. அப்படி மீறி யாராவது கணக்குக் கேட்டால், இருக்கவே இருக்கிறார் சாமி! அவர்மீது சத்தியம செய்துவிடுவார். பேசுவது தன் தொழிலல்ல என்றிருக்கும் சாமி அதை எப்படி மறுப்பார்?

எனினும், ஜனங்களுக்குத் தெரியும் அந்தப் பேர்வழி சாமி பணத்தைச் சாப்பிடுகிறான் என்று. வாய்விட்டுசொன்னால் அடி கிடைக்குமோ, உதை கிடைக்குமோ என்று பயந்துகொண்டு சும்மா இருந்து விடுவார்கள். ஆனால் தங்களுக்குள் 'குசுகுசு' வென்று பேசிக்கொள்வார்கள்.

அந்த தர்மகர்த்தாவிற்கு ஏதாவது வியாதி வந்துவிட்டால் போதும்! அவர்கள் மனதிலிருப்பதெல்லாம் வெடித்து வெளியே வரும்! "சாமி பணத்தைத் தின்றால் சாமி சும்மாவா விட்டுவிடும்!' எனபார்கள. அவன் செத்துப் போய்விட்டாலோ? "பாவி ஒழிந்தான்! சாமிப் பணத்தை சாப்பிட்டுட்டு சத்தியம் வேறேப் பண்ணினானே!" என்பார்கள்.

இதைப் போலவே ஊர் நாட்டாண்மைகாரனும் ஊரில இரண்டு மூன்று ஜாதியினர் இருந்துவிட்டால் போதும்! அப்புறம் ஊரைப்பற்றி சொல்லவே வேண்டியதில்லை. ஒரு ஜாதித் தலைவனுக்கும், இன்னொரு ஜாதித் தலைவனுக்குமிடையே நிலத்தைப்பற்றியோ, பணத்தைப் பற்றியோ, தண்ணீர் பாய்ச்சலைப்பற்றியோ ஏதாவது ஒருதகராறு ஏற்பட்டுவிட்டால், அந்தத் தகராறு அந்த இரண்டு ஜாதியினருக்கும இடையே ஏற்பட்டுள்ள தகராறாக மாறிவிடும். கத்தி, அறிவாள், கடப்பாறை, வேல் ஆகிய எல்லாம் தாராளமாக உபயோகிக்கப்படும். தங்கள் சொந்த சண்டையைத் தீர்த்துக் கொள்வதற்காக, ஜாதிக் கட்டுப்பாட்டைச் சொல்லி இரண்டு "பெரிய மனுஷர்களும்" தங்களுக்குப் படை திரட்டுவார்கள்.

ஊரில் மூன்று ஜாதி இருந்தால் மூன்று கட்சிகள் இருக்கும். பணக்காரர்களுக்குள் சண்டை ஏற்பட்டால், ஜனங்கள் சண்டையாக அது திருப்பிவிடப்படும்.

**"உழவர் ஊழியன்"**

இவ்விதம் நம் கிராமங்கள் தன் ஒற்றுமையை இழந்து, ஒற்றுமையால் கிடைக்கும் வனப்பை இழந்து பிரிந்து சின்னப் பின்னப்பட்டுக் கிடக்கின்றன.

தாலூகா தலைமை நகரிலுள்ள கோர்டுகளிலும், போலீஸ் ஸ்டேஷன்களிலும் நம் கிராம வ்வசாயிகள் நின்றுகொண்டிருக்கும் காட்சி, —காலையிலிருந்து கைகட்டி வாய் பொத்தி தவம் கிடக்கும் காட்சி— நம் மனதைக் கலக்குகிறது.

நாட்டின் சுபிட்ச வாழ்விற்கு ஒரு பிரதான அறிகுறி கிராம ஒற்றுமை. இந்த ஒற்றுமையைக் கட்டுவது ஒவ்வொரு தேசபக்தனின் கடமை.

இந்த ஒற்றுமையைக் கட்டுகிறது கிஸான் சபை! கிராம மக்களிடையே புது வாழ்வை உண்டாக்குகிறது கிஸான் சபை! எல்லா ஜாதியினரையும் தன் கொடிக்கீழ் திரட்டுகிறது.

கிஸான் சபையைக் கண்டு மிராசுதார்கள் பயப்படுகிறார்கள்; கோயில் தர்மகர்த்தாக்கள் அலறுகிறார்கள்; ஊர் சொத்தை சாப்பிட்டு அட்டகாசம் செய்தவர்கள் கலங்குகிறார்கள். ஏனெனில், மிராசுதார்களிடையே ஏற்படும் தகராறுகளுக்கு விவசாயிகள் உபயோகிக்கப்படுவதைத் தடுக்கிறது கிஸான் சபை. எல்லா ஜாதியினரிடையேயும் ஒற்றுமையை ஏற்படுத்தி, விவசாயிகள் எடுப்பார் கைப்பாவையாக இருப்பதைத் தடுக்கிறது.

விவசாயிகளிடையே ஏதாவது தகராறு ஏற்பட்டால், அவர்களைக் கோர்ட்டுகளுக்குப் போக விடுவதில்லை கிஸான் சபை. தானே தலையிட்டு அவர்களிடையே சமரசத்தை ஏற்படுத்துகிறது.

ஊர் பிளவுபட்டுக் கிடந்தால், ஊர் பொதுக் காரியங்களை யார் பார்ப்பது? தெருக்கள் வயல்களாக இருக்கும்; பள்ளிக்கூடச் சுவர் இடிந்து கிடக்கும்; எங்கும் நாற்றம்! இதையெல்லாம் ஒழுங்குபடுத்துகிறது கிஸான் சபை.

இரும்புப் பட்டை, புண்ணக்கு, உரம், மண் வெட்டி முதலியவை வாங்கிக்கொடுக்கும் ஸ்தாபனம் மட்டுமல்ல கிஸான் சபை! தூதுக் கோஷ்டி போகும் ஸ்தாபனம் மட்டுமல்ல! சண்டை சச்சரவற்றப் புதிய ஒன்றுபட்ட கிராமத்தை சிருஷ்டிக்கும் ஸ்தாபனம்!

கிராமத்திலேயே புதிய வாழ்வை சிருஷ்டிக்கிறது இந்தப் புதிய வாழ்வுதான் இந்தியாவின் எதிர்கால சுபிட்ச வாழ்விற்கு அறிகுறி! நம் விஷயங்களை நாமே நிர்வகித்துக்கொள்வோம் என்ற ஜனநாயகத்தின் வளர்ச்சி! கிராம ஜனநாயகம்தான், இந்தியாவின் ஜனநாயகமாக மலரப்போகிறது!

# மயக்கம் தரும் வரகு!

ராமனாதபுரம் ஜில்லா ஆலமரத்துப்பட்டியில் 100க்கு 60 பேர் நிலமில்லா விவசாயக் கூலிகள். கூலி கிடைத்தால் வயிறு நிரம்பும். ரேஷன் ஷாப்தான் தானியத்திற்கு ஆதாரம். சென்ற பஞ்ச காலத்தில் மொச்சக்கொட்டையையும், பிண்ணாக்கையும் தின்று கஷ்டப்பட்டனர். கிஸான் சபையின் மூலம்ரேஷனிங் கோரி கிளர்ச்சி செய்தனர்.

ரேஷனிங் வந்த பிறகு 1/6 பாகம் அரிசியும், 5/6 பாகம் உளுத்த சோளமும் மற்ற தானியங்களையும் பெற்று வந்தனர்.

சென்ற 14ந்தேதியிலிருந்து 15ந் தேதி வரை ரேஷன் கடையில் வரகு தானியத்தைத் தவிர வேறு தானியமில்லை ரேஷன் ஆரம்பித்ததிலிருந்து 3 நபர்களிடம் கடை மாறிவிட்டது. பத்து நாட்களில் 4 நாட்கள் கடை மூடப்பட்டுக் கிடக்கும். இந்தத் தடவை அந்த வரகை சாப்பிட்டவர்களில் நாரணபுரத்தில் 40 பேர் வரை மயக்கமபோட்டு 5 தினங்கள்வரை ஆபத்தான நிலைமையில் கிடந்தனர். டாக்டரைக் கூப்பிட்டுவந்து சுமார் 60 ரூபாய்வரை செலவழிக்க நேர்ந்தது. ஆலமரத்துப்பட்டியில் 15 பேர்வரை இவ்விதம் கஷ்டப்பட்டனர்.

மேற்கண்ட வரகின் தவிட்டை சாப்பிட்ட எருமை, நாய் முதலியவை 2 தினங்கள்வரை இரை தின்னாமல் மயங்கிக் கிடந்தன!

கிசான் சபை விவசாயிகளைத் திரட்டியது. காரியதரிசி ஸ்ரீனிவாசன் தலைமையில் 40 விவசாயிகளைக் கொண்ட ஒரு தூதுகோஷ்டி புறப்பட்டது. பிர்க்கா சபளை ஆபீஸரை சந்தித்தது. வரகு அரிசியை வாங்கும்படி நிர்ப்பந்திப்பதில்லை என்றும், பாதி அரிசியும பாதி தானியமுமாக ரேஷன் தரமுடியாதென்றும், சௌகரியமான வாழ்க்கை நடத்துகிறவர்களுக்குத்தான் முழு ரேஷனும் அரிசியாகத் தரபபடுகிறதென்றும் கூறினார். தன்னிடம் கலெக்டர் ஆலோசனை கேட்டால் 1/3 பங்கு அரிசியாகக் கொடுக்கும்படி சிபார்சு செய்வதாகவும் கூறினார்.

பிறகு தூதுகோஷ்டி சப் கலெக்டரைப் பேட்டி கண்டது. 1/3 பாகம் அரிசி போட "முயற்சி" பபதாகக் கூறினார். இன்னும் நிலைமை சீர்திருந்தவில்லை.

காங்கிரஸ் தேசபக்தர் என்று கூறிக்கொள்பவர்களைப்பற்றி ஒரு வார்த்தை தூதுகோஷ்டி புறப்பட்ட போது, இதைக் கலைக்க பகீரதப் பிரயத்தனம செய்தனர். "கலெக்டரிடம் போனால் சவுக்கடிதான் கிடைக்கும்!" என்று பயமுறுத்தினார்கள். ஆனால் இவர்களை விவசாயிகள் வெறுக்கிறார்கள். தங்களுடையமகாநாபடைக் காலாடித்தனத்தால் கலைத்தவர்களென்று வெறுக்கிறார்கள். இந்தப் பேர்வழிகளை விவசாயிகள் நன்கு அறிவார்கள். 1942ல் இங்கே சிறைக்குப் போனவர்கள் இன்று கம்யூனிஸ்டுகள். அன்று குதிருக்குள்ளும், ஜன்னலில்லா மச்சு வீட்டுக்குளளும ஒளிந்துகொண்ட சூரப்புலிகள் இவர்கள். 1942ல் கம்யூனிஸ்டகள் காட்டிக்கொடுத்தனர் என்று இவர்கள் சொன்னால் யார்தான் இவர்களை நம்புவார்கள்.

ஜி. ராமச்சந்திரன்.

## மதிப்புரை

### பிரிட்டிஷாருக்கு எனது வேண்டுகோள்

**மகாத்மா காந்தி**

மொழிபெயர்ப்பு:—அ. லெ. நடராஜன், (புதுமைப் பதிப்பகம் லிமிடெட், காரைக்குடி. விலை ரூ 2

காந்திஜி "ஹரிஜன்" பத்திரிகையில் 1942ம் வருடம் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு இப் புத்தகம். நல்ல காகிதத்தில் அழகான எடுப்புடன் வெளியிடப்பட்டிருக்கிறது. "ஹரிஜன்" பத்திரிகையைப் படிக்காதவர்களுக்கும், தமிழ்மொழியில் முழு மொழிபெயர்ப்பும் காணாதவருக்கும் இந் நூல் பலனளிக்கும். ஆனால் காந்திஜி சிறையிலிருந்து எழுதிய "வேண்டுகோள்களும்" வெளிவந்தவுடன் விட்ட அறிக்கைகளும் இல்லாமல் இப் புத்தகம் பூர்த்தியானதாகாது.

# அரிசி இல்லை! செங்கம் தாலூகாவில் பஞ்சம்!

வட ஆற்காடு ஜில்லா செங்கம் தாலூகாவில் உணவுப் பஞ்சம் முற்றிவிட்டது. இதை உடனடியாக சமாளிக்கக் காங்கிரஸ், முஸ்லிம் லீக், கம்யூனிஸ்டு ஆகிய கட்சிகள் ஒன்றுபட்டு, கிஸான் சபையுடன் சேர்ந்து ஜில்லா கலெக்டருக்கும், சென்னை சர்க்காருக்கும 22-10-45ல் தந்தி கொடுக்கப்பட்டது.

ஹிந்து பெண்களும் சரி, முஸ்லிம் பெண்களும் சரி தெருத் தெருவாக வீடு வீடாக அலைந்தனர். அரிசி கிடைக்க வில்லை.

தந்தியைக் கண்ட சர்க்கார் அதிகாரியாகிய டெபுடிதாஸில்தார் விசாரணைக்கு எல்லோரையும் கூப்பிட்டனுப்பினர். கம்யூனிஸ்டுக் கட்சி காரியதரிசியும், கிஸான் சபை காரியதரிசியும் அவ்வமயம் ஊரிலில்லை. நான் மட்டும் நிலைமையை விளக்கிக் கூறினேன். "உணவுப் பஞ்சம் ஏற்பட ஸ்தல அதிகாரிகளே காரணம். இந்த தாலூகாவில் மட்டும் வெளியூர்களுக்கு உணவுப் பொருள்களை அனுப்ப 26 பேர்களுக்கு லைசென்ஸ்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவர்களோடு நில்லாமல், திருவண்ணாமலை, போளூர், திருப்பத்தூர் ஆகிய தாலூகாக்களிலும் உள்ள லைசென்ஸ்தார்கள் சேர்ந்து, இவ்வருடம் ஜனவரி மாதம்வரை சுமார் 75 ஆயிரம் மூட்டைகளை நெல்லாகவும் அரிசியாகவும் வெளியூர்களுக்கு ஏற்றுமதி செய்து விட்டனர். இது போதாதென்று, கள்ள மார்க்கெட்டிற்கும் உணவு சென்று மறைந்து விட்டது. இதோடு, எந்த விலைக்கு வேண்டுமானாலும் விற்கலாம் என்று தாஸில்தாரும், ரெவின்யூ இன்ஸ்பெக்டரும் கடைக்காரர்களிடம் கூறிவிட்டனர். இதனால் புழுங்கல் அரிசி படி 10 அணவிற்கும், பச்சை அரிசி படி 12 அணவிற்கும் விற்கப்படுகிறது. எனினும ஊரிலிருக்கும் ஸ்டாக் 15 நாட்களுக்குமேல் காணாது. ஆகவே, உடனடியாக சர்க்கார் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்" என்று விரிவாக எடுத்துக் கூறினேன்.

இதைக் கேட்டவுடன் பிர்கா ரெவின்யூ இன்ஸ்பெக்டருக்கு கோபம் வந்துவிட்டது. "இதைப்பற்றி உன்னை யாரும் கேட்கவில்லை! அவசியமாகப் பேசாதே!" என்று கூச்சலிட்டார்.

நான் மேலும் பேசும்போது, "4 ஏக்கர் நிலத்திற்கு மேலுள்ளவர்களிடமிருந்து 75 சத விகிதம் கட்டுப்பாட்டு விலைக்கு சர்க்கார் தானியத்தைக் கொள்முதல் செய்யாதது மிகப் பெரிய தவறு" என்று எடுத்துரைத்தேன்.

விசாரணை ஆபீஸர் எல்லாவற்றையும் கேட்டுவிட்டு, "நடந்தது நடந்துவிட்டது. இனி உடனடியாக உள்ளூருக்கு மட்டும் என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்டார்.

"தினம் ஒன்றுக்கு 20 மூட்டை வீதம் வினியோகிக்க வேண்டும். சில்லரை விபாபார லைசென்ஸ்தார் சின்னசாமி உடையாரிடம் மூட்டைகளை ஒப்படைக்கக்கூடாது. அவர் மீது பொது ஜனங்களுக்கு நம்பிக்கை இல்லை. பொதுஜன நம்பிக்கையைப் பெற்ற வேறொருவரிடம் ஒப்படைக்க வேண்டும். இனி வெளி தாலூகாக்களுக்கு ஏற்றுமதி செய்யக்கூடாது" என்று கூறினேன்.

ஆபீசர் ஒப்புக்கொண்டு, காங்கிரஸ் கமிட்டி காரியதரிசியிடமும், என்னிடமும் கையொப்பம் வாங்கிகொண்டு போய்விட்டார்.

இந்த விசாரணை நடந்துகொண்டிருக்கும்போது சுமார் 200விவசாயிகளும் தொழிலாளர்களும் அரிசி கிடைக்காமல் கடை வீதியில் நின்று தவித்துக்கொண்டிருந்தனர். அவர்களை அழைத்து வந்து விசாரணை ஆபீசரிடம் காட்டினோம். "இவ்வித காட்சி தினசரி சர்வசாதாரணம்" என்று எடுத்துரைத்தோம். அங்கேயே விசாரணை ஆபீசரின் உத்திரவின்பேரில், நபர் ஒன்றுக்கு ஒரு படி அரிசி வீதம் வினியோகிக்கப்பட்டது. அன்று அதைப் பெற்றது விவசாயிகளுக்கு வரப்பிரசாதமாக இருந்தது

கட்சித் தலைவர்கள் என்ன கூறினபோதிலும், ஜனங்கள் குறை தீர்ப்பதில் இங்கு எல்லா கட்சியினரும் ஒன்றுபட்டிருக்கிறோம்.

சையத் உஸ்மான்
முஸ்லிம் லீக் செங்கம்.

## விவசாயிகள் கடன் பளு

விவசாயிகள் கடன் பளுவைப் பற்றி விசாரிக்க மத்திய சர்க்கார் நியமித்த ஒரு கமிட்டி கீழ்க்கண்ட கணக்கைக் கொடுத்திருக்கிறது:

| | ரூபாய் | |
|---|---|---|
| அஸ்ஸாம் | 22 | கோடி |
| பீஹார் | 108 | ,, |
| வங்காளம். | 97 | ,, |
| பம்பாய் | 58 | ,, |
| மத்திய மா. | 36 | ,, |
| பஞ்சாப் | 140 | ,, |
| ஐக்கிய மா. | 124 | ,, |
| சென்னை | 200 | ,, |

நம் மாகாணத்தில்தான் விவசாயி கடன் பளு ரொம்ப அதிகமாக இருக்கிறது.

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

### சர்க்கார் தயவா?

தோழரே,

மிராசுதார்களிடம் குத்தகைப் பத்திரம் ரிஜிஸ்டர் செய்து கொடுத்து சாகுபடி செய்யும் ஏழை ஹரிஜன விவசாயிகள் பலரை, சென்ற அஸெம்பளி தேர்தலின்போது மிராசுதாரகள் ஓட்டர்களாகப் பதிவு செய்தனர். "நம்ம ஆட்கள்தானே! நமக்கு ஓட்டு போடுவார்கள்' என்று சென்ற தேர்தலில் மிராசுதார்கள் நினைத்தார்கள்.

இப்பொழுது கிஸான் சபை பலப்பட்டிருக்கிறது. இதைப் பார்க்கும் மிராசுதார்களுக்கு கிலி பிடித்துவிட்டது. இந்த ஹரிஜன ஓட்டர்கள்—"நம்ம ஆட்கள்"—தாங்கள் நிறுத்தும் அபேக்ஷகருக்கு ஓட்டுப்போட மாட்டார்களே என்று பயப்படுகிறார்கள்.

மூலங்குடி என்ற கிராமத்தில் மன்னார்குடி தாலூகா காங்கிரஸ் கமிட்டி 13-10-45ல் கூடிற்று. அந்தக் கூட்டத்தில் இந்த விவசாயிகளின் ஓட்டுரிமையை ரத்துசெய்வதற்கு முயறசி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சில முடிவுகள் செய்யப்பட்டதாக நம்பத் தகுந்த நபர்களிடமிருந்து தெரியவருகிறது. இந்த முயற்சியில் அவர்களுக்கு உதவி செய்வதாக ஸ்தல அதிகாரிகளில் சிலர் வாக்குறுதி யளித்திருப்பதாகவும் கூறப்படுகிறது.

எல்லோருக்கும் ஓட்டுரிமை வேண்டுமென்று மௌலானா ஆஸாத் கூறி ரொம்பநாட்களாகிவிடவில்லை. அதற்குள் இங்குள்ள காங்கிரஸ் பிரமுகர்கள் விவசாயிகளின் ஓட்டுரிமையைப் பறிக்கும் 'கிர்மாணத்திட்டத்தில்' இறங்கிவிட்டனர். விந்தைதான்!

ஜனநாயகம், நேர்மை, ஒழுங்கு ஆகிய இதெல்லாம் அவர்களுடைய கண்முன் நிற்கவேயில்லை. "கம்யூனிஸ்டு பூச்சாண்டி"யைப் பார்த்து அரண்டு அதிகார வர்க்கத்தைப் போய் கட்டிக்கொள்கிறார்கள்!

ஒரு ஹரிஜன விவசாயி,
மன்னார்குடி.

★

### 'தேசீய'ப் பத்திரிகை சரடு!

தோழரே,

ஸ்ரீவைகுண்டம் வர்த்தக குமாஸ்தாகள் ஒன்றுபட்டனர். ஓயாமல் கிளர்ச்சி செய்தனர். ஐப்பசி முதல், வாரம் ஒரு நாள் விடுமுறையைப் பெற்றனர்.

இந்தச் செய்தியை 'தினமணி' எப்படி பிரசுரித்தது? "வாரம் ஒரு முறை கடைகளை அடைக்கக்கூடாதென்று ஜில்லாக் கலெக்டர் உத்திரவிட்டுவிட்டார்" என்று பிரசுரித்திருந்தது. இந்தச் செய்தியைப் பார்த்த குமாஸ்தாக்கள் பரபரப்படைந்தனர்; முதலாளிகள் சந்தோஷப்பட்டனர். நல்ல நாளாகப் பார்த்து கடையை அடைக்க சம்மதித்தவர்கள், கடையைத் திறந்துவிட நினைத்தனர்.

உடனே சங்கக் காரியதரிசி தாஸில்தாரிடம ஓடினார். "இதை எந்தப் பயித்தியக்காரன் போட்டது? அப்படி உத்திரவு வந்திருந்தால், நாங்கள் உங்களுக்குத் தெரிவிக்காமலிருப்போமா? பேஷாய்க் கடைகளை அடைக்கலாம்" என்று தாஸில்தார் கூறிவிட்டார். முதலாளிகள் முகத்தில் ஈ ஆடவில்லை!

செய்தி நிருபரின் சரடாக இருந்தாலும் சரி, ஆசிரியரின் கைவேலைப்பாடாக இருந்தாலும் சரி, பொய்ச் செய்தி பொய்ச் செய்திதான்.

வர்த்தக குமாஸ்தா,
ஸ்ரீவைகுண்டம்.

★

### அதிகார வர்க்கத்தின் முட்டுக்கட்டை

தோழரே,

22-10-45-ந்தேதி இரவு [illegible] மணிக்கு லார்டு நேப்பியர் வீ[illegible] போலீஸ் ஸ்டேஷனுக்கு அப[illegible] ஒரு பர்லாங்கு தூரத்தில், நம் [illegible]சித் தோழர்கள் சிலர் கட்சி பிரசுரங்களை விற்றுக்கொண்டிருந்தனர். அப்போது ஒரு கான்ஸ்டேபிள் ஓடி வந்தார். சப் இன்ஸ்பெக்டர் கூப்பிடுகிறார் என்று சொல்லி, தோழர் கிட்டப்பனை அழைத்துச் சென்றார். சாப்பாடு இல்லாமல் இரவு பூராவும் அவரை அங்கேயே வைத்திருந்து, மறுநாள் காலை 11 மணிக்கு சப் மாஜிஸ்திரேட் கோர்ட்டுக்கு கொண்டு போனார்கள். "இவன் பொதுஜனங்களுக்கு வீதியில் நின்று இடைஞ்சல் செய்துகொண்டிருந்தான்" என்று நியூஸன்ஸ் குற்றஞ்சாட்டி 2 ரூபாய் அபராதம் விதித்தார்கள்.

கட்சிப் பிரசாரத்திற்கு இவ்விதம் முட்டுக்கட்டை போட்டால், சுதந்திரமாய் தேர்தல் நடக்கிறது என்று எப்படி சொல்லமுடியும்?

K. S நாச்சிமுத்து,
ஈரோ[illegible]

# அடிமை நாடுகளின் விடுதலைக்கு போராடுவதே சோவியத் கொள்கை

"ஸான்பிரான்ஸிஸ்கோவில், அடிமை நாடுகளின் சுதந்திரத்திற்காக சோவியத் யூனியன்தான் தலைமை தாங்கிப் போராடிற்று. ஆனல், ஏனைய வல்லரசுகள் ஒதுங்கிநின்றதோடு, அந்தப் பிரச்னையைத் தலைதூக்க விடாமல் அமுக்கவும் முயற்சி செய்தன. இத்தகைய விஷயங்களில், சாதாரணமாக சோவியத் யூனியன் மௌனமாகவே இருப்பது வழக்கம். ஆனல், அது எப்பொழுதாவது ஏதேனும் பேசினல், எப்பொழுதும் அடிமை நாடுகளின் சுதந்திரத்தை ஆதரித்தே பேசியிருக்கிறது" என்று அமெரிக்காவின் அந்நிய நாட்டுக் கொள்கை சம்பந்தமாக பிரஸிடெண்டு ட்ருமன் வெளியிட்ட அறிக்கையைப்பற்றி அபிப்பிராயம் கூறும்பொழுது பண்டித ஜவஹர்லால் நேரு கூறினர்.

**R. H. நாதன்**

கடந்த 27 வருடங்களாக ஐரோப்பாக் கண்டத்தில், சோஷியலிஸத்தை ஸ்தாபிப்பதற்காகப் போராடும் தொழிலாளர்களோடும், கீழ்நாடுகளில் சுதந்திரத்திற்காகப் போராடும் மக்களோடும் ஒன்று சேர்ந்து ஒத்துழைப்பது என்ற கொள்கையை சோவியத் யூனியன் பின்பற்றி வந்துள்ளது. நடைமுறையிலும் அதை அனுஷ்டித்துக் காட்டியிருக்கிறது. சோவியத் யூனியன் தோன்றியவுடனேயே ஈரான், சைனு முதலிய நாடுகளோடு ஜாரின் ஏகாதிபத்தியம் செய்திருந்த அநியாயமான இரகசிய உடன்படிக்கைகளை ரத்து செய்தது. டாக்டர் சன்-யாட்-சென் உதவி கோரிய பொழுது, சைனுவுக்கு உருப்படியான உதவிகளைப் புரிந்த நாடு சோவியத் ஒன்றே ஒன்றுதான்.

நிலப்பிரபுத்துவ அரசர்களாலும், மடாதிபதிகளாலும் சுரண்டப்பட்டு அரசியல், பொருளாதாரம் ஆகியவைகளில் பிற்போக்கிலிருந்த மங்கோலிய மக்களுக்கு சோவியத் யூனியன் போதிய உதவியளித்து வந்தது. இன்று மங்கோலிய பொதுஜனக் குடியரசு வலிமை பெற்று சுபிட்சமாகத் திகழ்கிறது.

ஐக்கிய நாடுகளின் மகாநாடு ஸான்பிரான்ஸிஸ்கோவில் நடந்த பொழுது, நேருஜீ கூறுவதுபோல் சோவியத் யூனியன், அடிமை நாடுகளின் பூர்ண சுதந்திரத்திற்காக அரும்பாடு பட்டது.

"இந்த மகாநாட்டில், இந்தியப் பிரதிநிதி ஒருவர் இருக்கிறார். ஆனல், இந்தியா சுதந்திர நாடல்ல. சுதந்திர இந்தியாவின் குரலைக்கூடக் கேட்கும் காலம் வந்தே திரும் என்பது நமக்குத் தெரியும்"

என்று சோவியத் யூனியனின் அந்நிய நாட்டு மந்திரி வீர கர்ஜனை செய்தது இன்னும் நமது காதுகளில் ரீங்காரம் செய்துகொண்டே இருக்கிறது.

"நான் உண்மையை ஒப்புக்கொள்கிறேன். மாலடோவ், அவரது ஷரத்துக்களை வாசித்த பொழுது, எனது கண்கள் கண்ணீரை உகுத்தன. வர்ணிக்க முடியாத உத்வேக மடைந்தேன். இதோ, ஒரு பிரம்மாண்டமான சக்திவாய்ந்த தேசம்! சகல மக்களுக்கும் தேசிய சுதந்திரம் அளிக்கவேண்டுமென்று வன்மையாகவும், ஐயந்திரிபுக்கு இடமின்றியும் தாக்குகிறது"

என்று அமெரிக்காவிலுள்ள இந்தியா லீகின் தலைவர் ஜெ. ஜெ. சிங் கூறினர்.

—("ஹிந்துஸ்தான் டைம்ஸ்" மே மாதம் 10-ந்தேதி.)

அடிமைப்பட்டுக் கிடக்கும் சகல நாடுகளுக்கும் சுதந்திரம் அளிக்க வேண்டுமென்று சோவியத் யூனியன் ஸான்பிரான்ஸிஸ்கோவில் தனித்து நின்று போராடியது. ஆனல், டோரி பிரிட்டனின் தலைமையில், தென் ஆப்பிரிக்கா, பிரான்ஸ், லாடின் அமெரிக்க நாடுகள் (அர்ஜெண்டைனு, பிரஸில் பொலிவியன) முதலிய நாடுகள் இதை எதிர்த்தன.

இத்துடன் நிற்காமல் இத்தாலிக்கும், ஜப்பானுக்கும் சொந்தமான காலனிகள் தர்மகர்த்தா சபையின் மூலமாக நிர்வாகம் செய்வதிலும்கூட, காலனிகளில்லாத சோவியத் யூனியனுக்கும், சைனுவுக்கும் உரிமை கிடையாதென்று பிரிட்டன் போன்ற பிற்போக்கு ஏகாதிபத்திய நாடுகள் வாதாடின. சோவியத் யூனியன் தர்மகர்த்தா சபையில் சேர்த்துக்கொள்ளப்பட்டால், ஏகாதிபத்தியங்கள் காலனி மக்களைச் சுரண்டி, அவர்களை நிரந்தரமாக அடிமைப்படுத்தி வைக்க முடியாது போகும். சோவியத் யூனியன் தர்மகர்த்தா சபையில் தனக்கும் அங்கத்தினராக உரிமை கொடுக்கவேண்டுமென்று கோரிய பொழுது, "சோவியத் யூனியனுக்கு காலனி ஆசை" என்று பிற்போக்குப் பத்திரிகைகள் விஷமப் பிரசாரம் செய்தன.

ஆனல், சோவியத் யூனியன் ஓரளவு வெற்றி பெற்றது. தர்மகர்த்தா சபையில் சோவியத் யூனியனையும் சேர்த்துக்கொண்டுள்ளார்கள். சோவியத் யூனியன் காலனி மக்களின் சுதந்திரத்திற்காக தர்மகர்த்தா சபையில் போராடி வெற்றி பெறத்தான் போகிறது.

கடந்த சில மாதங்களாக "ஆசிய நாடுகளுக்கு சுதந்திரம் கொடு" என்று சோவியத் யூனியன் பெருத்த கிளர்ச்சி செய்துவருகிறது.

"காலனிகள் சம்பந்தமாகவும், அடிமை நாடுகள் சம்பந்தமாகவும் பிரிட்டனும், அமெரிக்காவும் முற்போக்குத் திட்டங்களை அனுஷ்டிக்காமலிருக்கின்றன.......... மீட்கப்பட்ட கீழ்க்கோடி நாடுகளின் நிலைமை திருப்திகரமாக இல்லை. இந்தியாவுக்குக்கூட சுதந்திரம் அளிப்பதுபற்றி பிரிட்டிஷ் சர்க்கார் அக்கரை காட்டுவதாகத் தெரியவில்லை......இந்தோ சைனு போன்ற மீட்கப்பட்ட நாடுகளில், அநேகமாக பழைய ஜப்பானிய காலனி ஆட்சியை நேச நாடுகள் நீடித்து வருகிறார்கள்; அடிமை நாட்டு மக்களின் சுதந்திர ஆர்வத்தை நசுக்க, ஜப்பானியரின் உதவியை நாடியிருக்கிறார்கள்..."

என்று சோவியத் அரசியல் நிபுணரான கிரிகரி ஈஜினுவ், "நியூ டைம்ஸ்" பத்திரிகையில் எழுதுகிறார்.

சுருங்கக் கூறின், காலனி மக்களின் சுதந்திரத்திற்காக சோவியத் யூனியன் தோன்றுதொட்டு போராடி வருகிறது.

### சோவியத் யூனியன் ஏகாதிபத்திய நாடாம்!

ஆனல், சில காங்கிரஸ் தலைவர்கள் சோவியத் யூனியனைப்பற்றி தூஷணைப் பிரசாரம் செய்துவருகிறார்கள். சில மாதங்களுக்கு முன்பு கடலூரில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டில், "ஏன், பிரிட்டிஷ், அமெரிக்க ஏகாதிபத்தியங்கள் ஒழிக என்று மாத்திரம் கோஷிக்கிறீர்கள்? ரஷ்யாவும் ஏகாதிபத்திய நாடுதான். ரஷ்ய ஏகாதிபத்தியமும் ஒழிக என்று கோஷமிடுங்கள்" என்று காமராஜ நாடார் ஹிதோபதேசம் செய்தார். இத்துடன் நிற்கவில்லை. "இந்தியா விஷயத்தில் ரஷ்யா அக்கரை காட்டவில்லை..." ("தினசரி" அக்டோபர் 27-ந்தேதி) என்று ஸ்ரீ காமராஜ நாடார் ஒரு பொதுக்கூட்டத்தில் கூறி, "முழுப் பூசணிக்காயை பழைய சோற்றில்" மறைக்கிறார்.

"......ஏகாதிபத்திய ஆசை பிடித்த பிரிட்டிஷாரை வெளியேறச் சொல்லிக் கொண்டிருக்கையில், அதே ஆசைபிடித்த ரஷ்யாவை எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்? ரஷ்யாவைப் பின்பற்றினல், இந்திய சுதந்திரத் துரோகிகள் என்பதுடன், ரஷ்யக் கருத்துடையவர்கள் ஏகாதிபத்தியக் கருத்துடையவர்கள்—ஆர். எச். என்.) எனக் கருதப்படுவார்கள்......" ("தினசரி" அக்டோபர் 11ந்தேதி) என்று ஸ்ரீ அவிஞசிலிங்கம் செட்டியார், மதுரையில் நடந்த பொதுக் கூட்டத்தில் சர்வதேச ஞானத்தை அவிழ்த்து விட்டிருக்கிறார்.

"சர்வதேசீயம் புகட்டிய ரஷ்யா இன்று அதை நழுவவிட்டு, தேசீயமாய் மாறிவிட்டது......" (தினசரி அக்டோபர் 24ந்தேதி) என்று பலவாறு சோவியத் யூனியனைத் தாக்கிப் பேசி வருகிறார் ஸ்ரீ முத்துராமலிங்கத் தேவர். அடிமை நாடுகளின் சுதந்திரத்தை எப்பொழுதும் ஆதரித்து வந்திருப்பதாகக் கூறுகிறார் அகில இந்தியத் தலைவர் நேருஜீ. ஏகாதிபத்திய நாடுகள் அடிமை நாடுகளின் சுதந்திரத்திற்காகப் போராடியதுண்டா? அதன் அர்த்தமென்ன? பட்டவர்த்தனமாகக் கூறுவதென்றல், சோவியத் யூனியன் ஏகாதிபத்திய நாடல்ல என்பதைத்தான் நேருஜீ சுட்டிக் காட்டுகிறார். நேருஜீ பொய் சொல்கிறரா? அல்லது ஸ்ரீ காமராஜ் நாடார், ஸ்ரீ முத்துராமலிங்கத் தேவர் போன்ற ஒரு சில காங்கிரஸ் தலைவர்கள் பொய் சொல்கிறர்களா? பொது மக்களே! முடிவு கட்டுங்கள்.

### ஏகாதிபத்திய வாதிகள் பிரசாரம்

ஏகாதிபத்தியங்களும், அதற்குத் தாளம் போடும் கிளேர் பூத்லூஸ், போன்றவர்களும் இதே குரலில் தான் பேசுகிறர்கள். சோவியத் யூனியன் ஏகாதிபத்திய நாடென்றும், ஐரோப்பாவிலும், மத்திய தரைக் கடலிலும், ஆசியாவிலும் உள்ள நாடுகளைக் கபளீகரம்செய்ய சோவியத் யூனியன் முயற்சி செய்கிறது என்றும் பொய்ப் பிரசாரம் செய்து வருகிறர்கள்.

காங்கிரஸ் மஹாசபையையும், மஹாத்மா காந்திஜீ, நேருஜீ போன்ற தலைவர்களையும் பாசிஸ்டுகள், ஜப்பானிய பாஸிஸ்டுகளுக்கு ஆதரவானவர்கள் என்றெல்லாம் பொய்ப் பிரசாரம் செய்த ஏகாதிபத்திய பிற்போக்காளர்களின் பொய் புரட்டுக்களை ஒரு சில காங்கிரஸ் தலைவர்களும் விழுங்கி, இந்திய மக்களிடையே உமிழ்கிறர்கள்!

ஏகாதிபத்தியங்களின் ஏகாதிபத்தியப் போக்கை, ஆங்காங்குள்ள ஒன்றுபட்ட பொதுஜன சக்தியின் உதவிகொண்டு, முறியடித்து வருகிறது சோவியத் யூனியன். எனவே ஏகாதிபத்திய பிற்போக்காளர்கள், சோவியத் யூனியனின் செல்வாக்கை, உலக மக்களிடையே குறைத்து, தனியே ஒதுக்கித் தள்ளி, தங்களுடைய ஏகாதிபத்திய ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ள சூழ்ச்சி செய்கிறர்கள். ஆனல், அடிமைப்பட்டுக் கிடக்கும் இந்தியர்களாகிய நாம், நேருஜீ கூறுவதுபோல், அடிமை நாடுகளின் சுதந்திரத்தை ஆதரிக்கும் சோவியத் யூனியனேடு பகைத்துக்கொள்வதனல், அதைப்பற்றி தூஷணப் பிரசாரம் செய்வதனல், என்ன பலன் கிடைக்கப்போகிறது? ஒரு சில தேசியத் தலைவர்கள் நம்மை எங்கு அழைத்துச் செல்லுகிறர்கள்? தோழர்களே! சிந்தித்துப்பாருங்கள்.

காலனி மக்களின் சுதந்திரத்திற்காகப் போராடும் சோவியத் யூனியனை ஆதரித்து, அதைப் பலப்படுத்துவது, நமது சக்தியைப் பலப்படுத்துவதாகும். ஏகாதிபத்தியங்கள் அதன் பலத்தைப்பலஹீனப்படுத்தி, ஏகாதிபத்திய ஆசையை நிறைவேற்றப் பார்க்கிறது. இந்த வலையில் நாம் சிக்குவதானது அறிந்தோ அறியாமலோ நமது சுதந்திரத்திற்கு நாமே, ஹானி விளைவிப்பதாகும்.

# தேர்தல் மசாலா

மத்திய சட்டசபைத் தேர்தலில், நமது மாகாண காங்கிரஸ் அபேட்சகர்களைக் குறித்து காங்கிரஸ் பத்திரிகைகளே கண்டித்திருக்கின்றன.

பன்முறை சிறைசென்ற காங்கிரஸ் தேசபக்தர் காஸா சுப்பாராவ் அவர்களை ஆசிரியராகக் கொண்ட இந்தியன் எக்ஸ்பிரஸ்.

"காங்கிரஸ் டிக்கட்டை வைத்துக்கொண்டு கொள்ளை லாபம் அடிக்கலாம் என்று நினைக்கும் கள்ள மார்க்கெட் வியாபாரிகளுக்கு சட்டசபை ஏற்பட்டதில்லை என்று காங்கிரஸ் ஸ்தாபனத்தில் உள்ள முக்கியஸ்தர்களுக்கு நினைவூட்ட வேண்டியிருக்கிறது" என்று முதலிலேயே எச்சரித்தது.

மீண்டும் 20-10-45ல் எழுதுகையில்,

"தகுதியற்ற அபேட்சகர்களை யதேச்சாதிகாரமாக தேர்ந்தெடுத்து, ஜனங்களுக்கு காங்கிரஸில் உள்ள அபிமானத்தை சோதிப்பது முடிவில் தீமை தரும் செய்கை" என்று வன்மையாக கண்டித்து எழுதியது.

"தேர்தல்கள் நெருங்க நெருங்க கொள்கைகள் பின்னுக்குப் போவதும், நபர்களே பிரதானமாக முன்னுக்கு வருவதும் முக்கியமாகத் தென்படுகின்றன......எல்லா காங்கிரஸ்காரர்களும் தனி நபர் அடிப்படையில் உருவாகும் அதிகார வேட்டைகளையும் போட்டிகளையும் அறவே வெறுக்கிறர்கள்" என்று 29-10-45ல் தினமணி எழுதியது.

ஹிந்து, சுதேசமித்திரன் கூட தங்கள் அதிருப்தியை வெளியிட்டிருக்கின்றன.

* * *

### பம்பாய் அபேட்சகர்கள்

பம்பாய் நகர காங்கிரஸ் அபேட்சகர்களாக ஸ்ரீ மஸானியும், டாக்டர் தேஷ்முக்கும் நியமிக்கப்பட்டிருப்பதைக் கேட்டு பம்பாய் காங்கிரஸ் வாதிகள் பலர் கண்டித்திருக்கின்றனர்.

லீக் எதிர்ப்பு, கம்யூனிஸ்ட் எதிர்ப்பு போக்கை ஆதரிக்கும் பம்பாய் பிரீபிரஸ் ஜெர்னல்கூட

"இவர்கள் இருவரும் தனியாக எடுத்துக்கொண்டாலும், கூட்டாக எடுத்துக்கொண்டாலும், பம்பாய் நகரத்துக்கு அதிக கௌரவத்தை அளிக்கக்கூடியவர்களல்ல" என்று எழுதியது. நீண்டநாள் காங்கிரஸ் பக்தரான பி. ஜி ஹார்னிமென் அவர்களை ஆசிரியராகக் கொண்ட பாம்பே ஸெண்டினல்,

"காங்கிரஸ் கட்டுப்பாட்டின் பெயரால் சமீபகாலத்தில் பம்பாயில் நடக்கும் செய்கைகள் மக்களின் நம்பிக்கைக்கு ஆட்டம்கொடுத்துவிட்டன. காங்கிரஸில் ஏதோ அடிப்படையான தவறு இருக்கிறது. அதிகாரத்திலுள்ளவர்கள் தங்கள் அதிகாரத்தை தொடர்ச்சியாக பட்டவர்த்தனமாக துர் உபயோகப்படுத்தி வருகின்றனர்: இவ் விதமாக பொதுஜன அபிப்ராயத்தை மீறி வருகின்றனர்" என்று எழுதுகிறது.

* * *

### தேஷ்முக் யார்?

பம்பாய் அபேட்சகர்கள் யார்? மஸானியைப்பற்றி சென்ற வாரமே எழுதியிருந்தோம். டாக்டர் தேஷ்முக் காங்கிரஸ் அங்கத்தினராகவிருந்தபோதிலும் ஹிந்து மகா சபையை ஆதரித்து வந்திருக்கிறார். எந்த காங்கிரஸ் இயக்கத்திலும் அவர் கலந்து கொண்டதில்லை. சட்டசபை பகிஷ்கார தீர்மானத்தை பகிரங்கமாக மீறினர்.

சென்ற ஆகஸ்ட் 29ம்தேதி ஒரு ஹிந்து மகாசபை கூட்டத்தில் தலைமைவகித்தார். இப்படிப்பட்டவரைத் தான் ஸர்தார் பட்டேலும், எஸ். கே. பாடீலும் காங்கிரஸ் அபேட்சகராக பொறுக்கியிருக்கின்றனர்.

* * *

டாக்டர் ஜீவராஜ் மேத்தாவும் இதே ஸ்தானத்துக்கு விண்ணப்பித்துக்கொண்டிருந்தார் இவர் ஒரு நீண்டநாள் காங்கிரஸ் வாதி. எல்லா காங்கிரஸ் இயக்கங்களிலும் கலந்து கொண்டவர். வைத்திய உலகத்திலே முக்கியமான ஸ்தானம் வகிக்கிறார். தன்னலமற்ற பொதுசேவையின்மூலம் பொதுஜன நன்மதிப்புக்கு பாத்திரமானவர். இவர் குடும்பமே பிரபல காங்கிரஸ் குடும்பம், இவர் மனைவி ஹன்ஸா மேதா காங்கிரஸ் இயக்கத்திலும் மாதர் இயக்கத்திலும் முக்கிய பங்கெடுத்தவர்.

ஆனல் மேத்தா பெயர் நிராகரிக்கப்பட்டது! ஹிந்து வகுப்புவாதி தேஷ்முக் பெயர் ஏற்றுக்கொள்ளப் பட்டது!

* * *

### என்ன நியாயம்?

ஆனல் தேஷ்முக் நியமனத்தை சர்தார் பட்டேல் தாங்கிப்பேசுகிறர். தனக்களித்த பிறந்ததின வரவேற்புக்குப் பதிலளிக்கையில், "டாக்டர் தேஷ்முக் நியமனத்தைக் குறித்து பல கண்டனங்களை நான் கேட்டேன். காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு அபேட்சகரின் தகுதிகளை பரிபூர்ணமாக சீர்தூக்கிப் பார்த்தது; அவர் கட்டுப்பாட்டை மீறவில்லை. 1942க்குப் பின் அவர் சட்டசபையில் பிரசன்னமாயிருந்தாரென்றல் இதரர் பின்னல் செய்ததை அவர் முன்னல் செய்தார்-அவ்வளவுதான் ......லட்சக்கணக்கான மக்கள் வங்காளத்தில் பட்டினி வாய்ப்பட்டு இறந்துகொண்டிருந்தபோது, பலரில் பேச்சுரிமை பறிக்கப்பட்ட பொழுது, டாக்டர் தேஷ்முக் அவர்களுடைய குறைகளை சட்டசபையில் எடுத்துரைத்து வாதாடினர்" என்று பேசினர். (1-11-45)

காங்கிரஸ் தீர்மானத்தை மீறி 1942ல் சட்டசபை சென்றவர் கட்டுப்பாட்டை மீறவில்லை! எந்த இயக்கத்திலும் கலந்துகொள்ளாவிட்டாலும், சட்டசபையில் வங்க மக்களின் சார்பாகவும் பிரஜா உரிமைக்காகவும் பேசியதால் அவர் தேசபக்தராகிவிடுவார்! ஆனல், வங்க மக்களின் பஞ்ச நிவாரண இயக்கத்தில் ஈடுஜோடில்லாத சேவை செய்த கம்யூனிஸ்ட்கள், பிரஜா உரிமைகளுக்காக தேசமெங்கும் கிளர்ச்சி செய்த கம்யூனிஸ்ட்கள் துரோகிகள்! இது எந்த நியாயத்தைச் சேர்ந்தது?

* * *

### ஒரு சம்பாஷணை

போன மாதம் சர்தார் வேதாரத்தினம் பிள்ளையும், நாடிமுத்துப் பிள்ளையும் நம் தோழர் ஒருவரை சந்தித்தார்கள்.

"திருஞானம் கூட எப்படி கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்துவிட்டார். நாம் ஒரு நல்ல ஊழியரை இழந்துவிட்டோம்" என்று வருத்தப்பட்டாராம் சர்தார். ஸ்ரீ திருஞானம் ஆகஸ்ட்காலத்தில் அசுர அடக்குமுறைக்கு ஆளானர். பனிரண்டு கசையடிகளும் மூன்று வருட சிறைவாசமும் அனுபவித்த தீரர்.

அதன் பின், நம் தோழர் மன்னர்குடி தொகுதியில் யார் நிற்கிறர்கள் என்று கேட்டிருக்கிறர். தானாவது, சர்தாராவது நிற்கலாமென்று நாடிமுத்துப் பிள்ளை பதிலளித்தாராம். கம்யூனிஸ்ட் கட்சி தோழர் மணலி கந்தசாமியை நிறுத்லாமென்று சர்தார் கூறினராம்.

"ஹரிஜனங்கள் மாத்திரம்தான் கம்யூனிஸ்ட்டுக்கு வோட் போடுவார்கள்" என்று நாடிமுத்துப் பிள்ளை அபிப்பிராயப்பட்டாராம்.

"ஹரிஜன தொகுதியில் கம்யூனிஸ்ட் அபேட்சகர் வெற்றி பெறுவது நிச்சயம்" என்று சர்தார் கூறினர் பொதுத் தொகுதி தனக்கு கிடைக்குமென்ற சபலம்போலும்!

* * *

வாசகர்களுக்கு இருவரையும் நன்றாகத் தெரியும். 1942ல் காங்கிரஸ் அங்கத்தினர் பதவியைக்கூட ராஜினமா செய்துவிட்டு, ஜில்லா போர்டு தலைவர் பதவியை மாத்திரம் கெட்டியாகப் பிடித்துக் கொண்ட 'தலைவர்' நாடிமுத்து பிள்ளை. அந்தக் காலத்தில் 'கால்டெக்ஸ்' ஏஜென்ஸியைக் காப்பாற்றிய காங்கிரஸ் பிரமுகர்களில் பிரதானமானவர்! ஸர்தாரோ யுத்தகாலத்தில் உப்பு வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தார்.

மன்னர்குடி தொகுதியில்தான் போனதடவை காங்கிரஸ் எம். எல். ஏ. வாக யிருந்தார் சர்தார். ஆனல் கடந்த மூன்று வருஷங்களாக விவசாயிகள் கஷ்டப்பட்டபோது திரும்பிக்கூட பார்க்கவில்லை. கிஸான் சபைமீது தடைவிதித்து, கிஸான் தலைவர்களை அதிகாரவர்க்கம் வெளியேற்றியது. ஆனல் ஸர்தார் ஒரு கண்டன அறிக்கைகூட வெளியிடவில்லை.

இன்று தன் 'பரம்பரை' நாட்டாண்மை பறிபோகிறதே யென்று கலக்க மடைகிறர். விவசாயிகள் இயக்கத்தின் ஜீவசக்தியை நிரூபிக்க கம்யூனிஸ்டு அபேட்கர் நின்றுலென்ன செய்வார்! பாவம்!

காலம் மாறிவிட்டது. விவசாயிகள் விழிப்படைந்து விட்டார்கள். மத்தியகால தர்பாருக்கு இனி இடமில்லை. பொதுஜன சேவகர்களைத் தான் ஜனங்கள் ஆதரிப்பார்கள்.

—எஸ். ராமகிருஷ்ணன்.

# தமிழர் சுதந்திர குடியரசு ஓங்குக!

## ★ நாம் யாரையும் வெறுக்கவில்லை;
## ★ பிறர் நம்மை வெறுக்கவேண்டாம்!
## ★ சம அந்தஸ்தில் ஒன்றுபடுவோம்!

"என்ன சார்! ரொம்ப மோசமாய் போய்விட்டது! மலையாளத்திலேகூட இவ்வளவு பேர் இருக்கமாட்டாங்கபோலே யிருக்கு, தமிழ்நாட்டிலே இருக்கிற மலையாளத்து ஆட்களைப் பார்த்தால்" என்று என் நண்பர் ரொம்ப அலட்சியமாகக் கூறினார்.

"அட, அவர்களைப் போய் சொல்லப்போயிட்டாயே? அங்கே வேறே பிழைப்பில்லாமல் அவர்கள் வருகிறார்கள். சென்னையிலே தங்கசாலைத் தெருவைப் போய்ப் பாரு! ஒரே மார்வாரி மயம்! சேட்டுகளும், தாஸ்களும், ராம்களும், பாய்களும் தான்! பெரிய பெரிய திண்டு மெத்தைகளில் காலை நீட்டி உட்கார்ந்து கொண்டு 'கன கன' என்று வெள்ளையப்பனை அவர்கள் அடுக்கிக்கொண்டே போகும் காட்சி அபாரம்! பச்சைத் தாள்கள் புரளுவது கண்ணுக்குப் பச்சையாகவே இருக்கும். இதைச் சொல்லாமே அதைப்போய் சொல்லப் போயிட்டீங்களே!" என்று இன்னொரு நண்பர் 'கடகட' வென்று பேசிக்கொண்டே போனார்.

"ஆமாம் சார்! மெட்ரூஸ் மார்க்கெட்டுகளே அவர்கள் கையில்தான் சார் இருக்கிறது. தங்க, வெள்ளி மார்க்கெட்டா? அவர்களிடம்தான் போகவேண்டும்! புஞ்சை தானிய மார்க்கெட்டா? அதுவும் அவர்களிடம்தான்! ஒரு சரக்கை கொள்முதல் செய்தால் கொஞ்சமாகவா வாங்குகிறார்கள்? அப்படியே சுற்றிவளைத்து மற்றவர்களுக்கு இடமில்லாமல் செய்துவிடுகிறார்கள் சார்! அவர்கள் மனது வைத்தால் எந்த சரக்கையும் நமக்குக் கிடைக்காமல் செய்துவிட முடியும்!" என்று முதலில் பேசிய நண்பர் விளக்கிக் கூறினார்.

"வடக்கத்தியான்களையே ஒழித்துக் கட்டணும் சார்!" என்று அவர்கள் முடிவுக்கு வந்து, 'வடக்கத்தியான்' வாழ்க்கையில் காணப்படும் குறைகளையெல்லாம் வைத்து விமர்சனம் செய்து, பரிகாசம் செய்ய ஆரம்பித்தனர்.

* * *

### "அரவவாடு"

சென்னையில் சில ஆந்திரர்கள் பேசிக்கொண்டு இருந்தார்கள். "அரவவாடு" என்று என்னைப் பார்த்துப் பரிகாசமாகச் சிரித்தார்கள். எனக்கு அர்த்தம் விளங்கவில்லை. தெலுங்கு தெரிந்த ஒரு நண்பரின் மூலம் அறிந்துகொண்டேன். அது தமிழர்களைப் பரிகாசிக்கும் சொல்!

ஒரு ஆந்திரத் தோழரைச் சந்தித்து ஆங்கிலத்தில் பேசினேன். "ஏன், எங்களைப் பரிகாசிக்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"அட! என்னய்யா, ஒன்றும் தெரியாதவர்போல் பேசுகிறீரே! எங்கள் ஆந்திரா நாட்டிற்கு வந்து பாருங்கள். எல்லா உத்தியோகங்களும் தமிழன் கையில்! எங்கள் வாலிபர்கள் படித்துவிட்டு வேலைக்குத் திண்டாடும்போது, உங்கள் ஊரிலுள்ளவன் வந்து எங்கள்மீது ஆட்சி செலுத்துவதா? எங்கள் நாட்டையே சுரண்டுகிறீர்களே! 'உங்களுடன் சேர்ந்து ஒரே மாகாணத்தில், ஒரே அரசாங்கத்தின் கீழே இருப்பதனால் அல்லவா, இப்படி எங்கள் உரிமைப் பறிபோகிறது?" என்று அடுக்கிக்கொண்டே போனார்.

"எங்களுக்குத் தனியாக மாகாணத்தைப் பிரித்துவிட்டால், எங்கள் இஷ்டப்படி நாங்கள் செய்துகொள்வோம். ஒற்றுமை என்று சொல்லி எங்கள்மீது குதிரை சவாரி செய்ய ஒருபோதும் நாங்கள் உங்களை விடமாட்டோம்! நீங்கள் எங்களைச் சுரண்டும் வரை, உங்களை நாங்கள் வெறுக்கத்தான் செய்வோம்" என்று முடித்தார்.

* * *

### பர்மாவில்

இன்னொரு நண்பன், என்னுடன் படித்தவன், ஒருநாள் திடீரென்று "ரங்கூனுக்குப் போகப் போகிறேன்" என்றான். "வயிற்றைக் கழுவணுமோ இல்லையோ? இங்கேதான் ஒரு வேலையும் இல்லையே!" என்று காரணத்தை விளக்கினான். எனக்கு என்ன சொல்வதென்று புரியவில்லை. "போய் விட்டு வாப்பா!" என்று வழி அனுப்பினேன்.

மூன்று மாதங்கழித்து அவனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. "ரங்கூனுக்கு வந்தப்பிறகு எனக்கு ரொம்ப விஷயங்களில் தெளிவேற்பட்டிருக்கிறது. நம்மைப் பார்த்து இங்குள்ள பர்மியர் ஆத்திரமடைகின்றனர். இங்கு பர்மிய விவசாயிகளுக்கு சொந்தமான நிலங்களில் ஒரு பெரும் பகுதி நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வசம் வந்துவிட்டது. வட்டிக்குக் கடன் கொடுத்து அவர்கள் நிலத்தைப் பறித்துக் கொண்டு விட்டனர். இதனாலும், பர்மியருக்கே போதிய தொழில்களைச் செய்ய வசதி இல்லாதிருப்பதாலும் நாம் அவர்களுடைய ஆத்திரத்திற்குள்ளாகுகிறோம் நம் ஊரிலுள்ள மார்வாரிகளைப்பற்றி நான் எவ்வளவு ஆத்திரமாக உன்னிடம் பேசியிருக்கிறேன்? அதெல்லாம் என் நினைவிற்கு வருகிறது! நான் உன்னிடம் பேசியது போலவே, இங்கே பர்மியர்கள் பேசிக்கொண்டிருந்ததை நானே கேட்டேன்! ஒரு சிலப் பணக்காரர்கள் செய்யும் கொடுமையால், என்னைப்போன்ற 'வயிற்றைக் கழுவ' வந்திருப்பவர்களும் அவமானத்திற்கு உள்ளாகவேண்டியிருக்கிறது. பர்மியரை ஒடுக்கவேண்டும்; சுரண்டவேண்டுமென்று எனக்கோ என்போன்ற தொழிலாளிகளுக்கோ எள்ளத்தனை எண்ணமும் கிடையாது. எனினும் அவர்கள் என்னையும் "கொள்ளைக்காரன்!" என்று நினைக்கிறார்கள்!

பர்மியர் சுதந்திரம் வேண்டுமென்கிறார்கள். பிரிட்டிஷாரிடமிருந்து மட்டுமல்ல; இந்திய நிலச்சுவான்தார்களிடமிருந்தும் விடுதலையடைய விரும்புகிறார்கள்!" என்று அதில் விரிவாக எழுதியிருந்தான். சிலோன், மலேயா முதலிய நாடுகளிலும் இவ்விதமே தமிழர்நிலைமை இருக்கிறது.

* * *

### தேசீய இன உணர்ச்சி

இந்த உணர்ச்சி—தேசிய இன உணர்ச்சி—ஒவ்வொரு நாட்டிலும் வளர்ந்துவிட்டது. ஒரு சில செட்டியார்கள் பர்மாவில் போய் சுரண்டுவதால் தமிழர் இனம் அங்கு வெறுக்கப்படுகிறது. ஒரு சில மார்வாரி பண மூட்டைகள் நம்மை சுரண்டுவதால், வட நாட்டிலுள்ள மக்களையே—விவசாயிகளை தொழிலாளர்களை—நம் ஜனங்கள் வெறுக்க ஆரம்பித்து விடுகின்றனர்.

கடந்த சில வருடங்களாக நாட்டில் ஏற்பட்டிருக்கும் இந்த உணர்ச்சி நாளுக்குநாள் வளர்ந்து வருமேயொழிய கொஞ்சம் கூட குறைந்து விடாது. தமிழர் நாம், தமிழ்நாடு நம்மது என்ற உணர்ச்சியை இனி யாராலும் மாற்ற முடியாது.

இவ்வுணர்ச்சிக்கு திருப்தி ஏற்பட்டு தமிழர் சுதந்திரம் வாழ்க்கை அனுபவமாக மாறுவதற்கு வழி செய்யப்படாவிட்டால், குருட்டு வழிகளில் இது செலுத்தப்படும். ஆந்திர மக்களுடன் சிநேக பாவத்துடன் இருப்பதற்கு பதில், சண்டையிட்டுக் கொண்டிருப்போம்.

இந்தப் பிரச்னையை தீர்ப்பதற்கு—முழுவதும் தீர்ப்பதற்கு—உலகில் இதுவரைக் கண்ட வழிகளில், சுயநிர்ணய உரிமை ஒன்றுதான் சரியான வழியாக இருக்கிறது. இதை ரஷ்ய தொழிலாளிவர்க்கம் நிரூபித்துக் காட்டியிருக்கிறது.

* * *

### சோவியத் நாட்டில்

இன்றைக்கு நவம்பர் 7ம் தேதி. இப்புனித தினத்தில்தான் ரஷ்ய தொழிலாளி வர்க்கம்தான் புது உலகக் கோட்டையைக் கட்டிற்று. அக்கோட்டையின் அஸ்திவாரச் சுவர்களில் ஒன்றாக சுயநிர்ணய உரிமைச் சுவரை எழுப்பிற்று.

இந்தச் சுவர் அன்று எழுப்பப்படாமல் போயிருக்குமானால், இந்நேரம் அக்கோட்டையே சரிந்து விழுந்திருக்கும். நாஜிகள் கண்ட கனவு நினைவாகியிருக்கும். ஸ்டாலின் கிராடைப் பாதுகாக்க ரஷ்யர்களோடு உக்ரேனியர்களும், ஜார்ஜியர்களும், டார்டாரியர்களும், மங்கோலியர்களும், தோளோடு தோள் நின்றிருக்க மாட்டார்கள். இன்று சென்னைக்கு ஆந்திரன் பிரதம மந்திரியா, தமிழன் பிரதம மந்திரியா என்று அடித்துக் கொள்வதுபோல் அடித்துக்கொண்டு, நாஜிகளுக்குக் கதவைத் திறந்துவிட்டிருப்பார்கள்.

ஆனால் இந்தச் சுவர்—சுயநிர்ணய உரிமையால் எழுந்தச் சுவர்—அவ்விதம் நடைபெறாமல் தடுத்தது!

இன்றைக்கு நாம் பிரிட்டிஷாரை திட்டுகிறோம்; வெறுக்கிறோம். இதைப் போலவேதான் ரஷ்யரை உக்ரேனியர் திட்டினர்; வெறுத்தனர்; சண்டையிடத் தயாராக இருந்தனர்.

இன்றைக்கு ஆந்திரர்கள் நம்மை வெறுக்கிறார்கள். இதைப் போலவே

**இஸ்மத் பாஷா**

அன்று ஜார்ஜியர் ஆர்மீனியரை வெறுத்தனர். ஜார்ஜியரே தங்களுக்குள் அடித்துக்கொண்டு கிடந்தனர்.

இன்று அப்பரந்த பூமியில் இத்தகைய நிகழ்ச்சியொன்றும் நிகழ்வதில்லை!

இருநூறு விதமான ஜனங்கள் வாழ்கிறார்கள். வெவ்வேறு விதமான பாஷைகளைப் பேசுகின்றனர். வெவ்வேறு விதமான ஆடைகளை அணிந்திருக்கின்றனர். வெவ்வேறு விதமான உணவுப் பொருள்களை உண்டு பழகியிருக்கின்றனர்.

16 குடியரசுகள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் தனக்கு தானே ராஜா. அங்கு வாழும் ஜனங்கள் மனோபிஷ்டத்திற்கு எதிராக எதையும் செய்யாது.

இந்த ஒவ்வொரு குடியரசுக்குள்ளும் குட்டிக் குடியரசுகள்; சுயேச்சைக் குடியரசுகள். ரஷ்ய குடியரசிற்குள் 16 குட்டிக் குடியரசுகள் இருக்கின்றன. அஜர்பைஜான் குடியரசிற்குள் நிச்சிசேவான் என்ற ஒரு குட்டிக் குடியரசு! ஜார்ஜிய குடியரசிற்குள் இரண்டு குடியரசுகள்! இவ்விதம் ஒரே பாஷையைப் பேசி, ஒரே விதமான பழக்க வழக்கங்களைக் கொண்டு, ஒரே விதமான பொருளாதாரம் இயங்கும் தன்மையைக் கொண்டு, சரித்திரப் பரம்பரையைக்கொண்டு, ஒரேவிதமான உடல் கட்டுக்கோப்புடன் வாழும் ஒவ்வொரு விதமான மக்களுக்கும் தனித்தனிக் குடியரசு.

இந்தக் குடியரசுகள் எல்லாவற்றிற்கும் பொதுவாகவுள்ள நலன்களை கவனிப்பதற்காக, ஒவ்வொன்றும் தன்னிச்சைப்படி சேர்ந்து ஒரு குடும்பமாக ஒன்றுபட்டிருக்கின்றன. அன்னிய நாடுகளுடன் அவை நேரான சம்பந்தத்தை ஏற்படுத்திக் கொள்ளலாம்; தம் தம் இராணுவத்தை அமைத்துக் கொள்ளலாம்.

வேலை வேண்டி ஒரு தேசத்தவன் இன்னொரு தேசத்திற்கு ஓடுவதில்லை. எல்லோருக்கும் தாய் நாட்டிலேயே வேலையுண்டு. அப்படிப் போனால் அந்த தேசத்தின் சர்க்கார் அனுப்பும் பிரதிநிதிகளாகச் செல்கின்றான். ஒரு தேசத்தான் பிரதம மந்திரியாகிவிட்டால், இன்னொரு தேசத்து மக்களுக்கு தீங்குவந்து விடும் என்று யாரும் பயப்படுவதில்லை,

* * *

### சுதந்திர குடியரசுகள்

இதைத்தான் இந்தியத் தொழிலாளி காட்டுகிறான். "பார்! நன்றாகப் பார்! தெளிவாகப் பார்!" என்று சொல்கிறான்.

இந்தவிதமே நம்மாலும் நம் பிரச்சினையைத் தீர்க்க முடியாதா? நிச்சயம் முடியும்!

ஜார் காலத்தில் ஜனங்கள் அடித்துக் கொண்டனர். ஏகாதிபத்தியக் காலத்தில் நாம் சச்சரவிட்டுக்கொள்கிறோம். ஜனங்கள் காலத்தில் அங்கு அந்த சச்சரவுகள் ஒழிந்தன. நாமும் நம் ஜனங்கள் ஆட்சியில் சச்சரவுகளை ஒழிப்போம்.

(8-ம் பக்கம் பார்க்க)

---

திருச்சி

# வண்டிகளில் செங்கொடி!
## ஒரு மைல் நீள அற்புத ஊர்வலம்!

*திருச்சி மெயின் கேட்டில் திடீரென ஓர் கோஷம் வானமதிரக் கேட்டது. செங்கொடிக்கு ஜே! குதிரை வண்டித் தொழிலாளர்களே ஒன்றுசேருங்கள்!! மாட்டுவண்டித் தொழிலாளர்களே ஒன்றுசேருங்கள்!!!—இம்முழக்கங்கள் திருச்சி நகருக்கு புதிது. சமூக அடித்தளத்தில் வீழ்ந்து கிடக்கும் பாமரத் தொழிலாளியின் சுதந்திரக் குரல் உச்சஸ்தாயில் கேட்க ஆரம்பித்துவிட்டது.*

**குதிரை வண்டிகளும், மாட்டு வண்டிகளுமாக சுமார் 250 வண்டிகள் ஒன்றன்பின்னொன்றாக அணிவகுத்து நகர்ந்தன. வண்டிகளின் இருபுறங்களிலும் செங்கொடிகள் அழகுடன் அசைந்தாடின. ஒரு மைல் நீள ஊர்வலம்—பார்ப்பதற்கு அற்புதமாயிருந்தது.**

திருச்சி குதிரை வண்டித் தொழிலாளர்களும் மாட்டு வண்டித் தொழிலாளர்களும் இன்று புதிய மனிதர்கள். விழிப்படைந்த சுருட்டுத் தொழில்லாளர்களின் ஆர்ப்பாட்டங்களையும், ரயில்வே தொழிலாளர்களின் மகாநாடுகளையும், நெசவுத் தொழிலாளர்களும், நகர சுத்தி தொழிலாளர்களும் நடத்தும் கிளர்ச்சிகளையும் கண்டு, இந்தக் குதிரை-மாட்டு வண்டித் தொழிலாளர்களும் எழுச்சியடைந்து விட்டார்கள். ஏனைய தொழிலாளர்களைப் போன்று தாங்களும் சங்கம் அமைத்து தம் குறைகளைப் போக்க வேண்டுமென உணர்ந்தார்கள்.

குறைகளை வெளியிட வகையின்றி மௌனமாக அல்லல் பட்டுக்கொண்டிருந்த இவர்களை ஒன்று திரட்டி சங்கம் அமைத்து, வலிமை பெறச் செய்தனர் கம்யூனிஸ்டுகள். வண்டிக்காரர்கள்கூட மேடையேறி அரசியல்—பொருளாதார விஷயங்களைப்பற்றி பேச ஆரம்பித்து விட்டார்களேயென திருச்சி பொது மக்கள் ஆச்சரியப்பட்டார்கள். நாட்டில் காங்கிரஸும் லீகும் சண்டை போட்டுக்கொண்டிருக்கையில், இந்துக்களும் முஸ்லிம்களு மடங்கிய இந்த தொழிலாளர்களை கம்யூனிஸ்டுகள் ஒன்றுபடுத்தி விட்டார்களென சந்தோஷப் படுகிறார்கள்.

### அற்புத ஊர்வலம்

திருச்சி மெயின் கேட்டிலிருந்து 26-10-45ல் குதிரை வண்டிகளும் மாட்டு வண்டிகளுமாக சுமார் 250 வண்டிகள் ஊர்வலமாகப் புறப்பட்டன. திருச்சி சுருட்டு தொழிலாளர்களும், நெசவுத் தொழில்லாளர்களும் வண்டிகளில் அமர்ந்து கொண்டு ஜெயகோஷம் செய்தார்கள். ஊர்வலம் ஒரு மைல் நீளமிருந்தது. பாலக்கரை, பீமநாய்க்கன் பாளையம், முனிசிபல் ஆபீஸ், உறையூர் ஆகிய இடங்களுக்கு ஊர்வலம் சென்றது.

### மழையின் மத்தியிலும் கூட்டம்

ஊர்வலம் பொதுக் கூட்டமாக மாறியது. தோழர் மெஞ்ஞானத் தேவர் தலைமை வகித்தார். கூட்டம் ஆரம்பித்தவுடன் பலத்த மழை ஆரம்பித்தது. உடனே கூட்டத்தில் உட்கார்ந்திருந்தவர்களெல்லோரும் வண்டிகளுக்குள் உட்கார்ந்துகொண்டார்கள். வட்ட வடிவமாக வண்டிகள் நிறுத்தப்பட்டன. பிரசங்கிகள் குடைக்கீழ் நின்றுகொண்டு பிரசங்கம் செய்தார்கள்.

24-10-45லும் இதே தொழிலாளர்களின் பொதுக் கூட்டம் தோழர் காத்தான் தாளதியார் தலைமையில் நடந்தது. குதிரை—மாட்டு வண்டித் தொழிலாளர்களான தோழர்கள்: ஷேக் சாயபு, சர்தார் கான், சிப்பாய் சாயபு, காத்தான் தாளதியார், மெஞ்ஞானத் தேவர் முதலியவர்களும், கம்யூனிஸ்டு தோழர்கள் சி. எஸ். ஞானம், கே. பி. எஸ். கோன், ஏ. வீரபத்திரன், ஏ. எஸ். கிருஷ்ணமூர்த்தி முதலியவர்களும் தொழிலாளர்களின் குறைகளைப் பற்றியும் வருகிற தேர்தலில் பொதுஜனங்களுக்கு உழைப்பவர்களையே தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும் பேசினார்கள். தோழர்கள்: அ. முஸ்தபா சாயபு, வீராசாமி முத்திரியர், பீர் சாயபு முதலியவர்கள் "குதிரை—மாட்டு வண்டித் தொழிலாளர் சங்கம்" அமைப்பதில் தீவிரமாக முனைந்துள்ளார்கள்.

T. P. ரத்தினம்.

---

மதுரை

# குதிரைவண்டி சங்கத்தார் கிளர்ச்சி!

மதுரை குதிரைவண்டி தொழிலாளர் சங்கம் நாளுக்குநாள் வலுவடைந்து வருகிறது.

சென்ற ஒரு மாத காலத்திற்குள், ஒவ்வொரு ஜட்கா ஸ்டாண்டிலும் கூட்டங்கள் கூட்டி அவர்களது குறைகள் விளக்கப்பட்டன. நாட்டின் நிலைமை விளக்கப்பட்டது.

### அவதி கொஞ்சமல்ல

வண்டிச் சக்கரத்துக்கு வேண்டிய பட்டா நிர்ணய விலையில் கிடைக்காமல் இவர்கள்படும் அவதி கொஞ்ச நஞ்சமல்ல. குடும்பத்திற்கு வேண்டிய விறகும் நிர்ணய விலையில் கிடைப்பதில்லை. குதிரைக்கு தேவையான சேணமும் நிர்ணய விலையில் கிடைப்பதில்லை. இரவில் ஓடும் வண்டிகளுக்கு மண்ணெண்ணெய் அகப்படுவதில்லை. வண்டிகளை நிறுத்துவதற்கு போதிய ஸ்டாண்டுகள் கிடையாது. திண்டுக்கல்லில் இருப்பதுபோல், மழை பெய்தால் குதிரைகள் தங்குவதற்கு வசதியான முறையில் மேல் டாப்புகள் போடப்பட்ட ஸ்டாண்டுகள் இங்கு கிடையாது. இதனால் அவர்களும் அவர்கள் குடும்பமும், குதிரைகளும் படும் கஷ்டங்கள் சொல்லி முடியாது. இந்த லக்ஷணத்தில் எடுத்ததிற்கும் தொடுத்ததிற்கும் மெல்லாம் போலீஸ் மிரட்டல்கள் வேறு! முனிசிபாலிடியில் லைசென்ஸ் வாங்குவதற்காக இவர்கள் படும் பாடு பெரும்பாடாய் விடுகிறது.

இந்த தொல்லைகள் இத்துடன் நின்றுவிட்டதா? இல்லை. இவர்கள் துரிதமாக வளர்ச்சியடைவதைக் கண்ட சிலருக்கு வயிறு பொருமிற்று. கண்ணைக் கரித்தது. "இவர்களின் வளர்ச்சிக்குக் காரணம் கம்யூனிஸ்டுகள்தானே! செங்கொடித்தானே! அதைப் பிய்த்தெறி. கொளுத்து. அவர்களது சங்க போர்டை உடைத்தெறி" என்றனர். காரியத்தில் காட்டினர். காங்கிரஸ் தலைவர்கள் இதைக் கண்டிக்க முன் வரவில்லை!

14-10-45-ல் தெற்கு வாசல்ஜட்கா ஸ்டாண்டில் தோழர் சக்கரை ராவுத்தர் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் மேற்படி விஷமச் செய்கைகளைக் கண்டிக்குமாறு தீர்மானம் நிறைவேற்றி உள்ளூர் காங்கிரஸ்காரர்களுக்கு அனுப்பப்பட்டது. தோழர்கள், K. T. K. தங்கமணி, M. R. S. மணி, M. S. S. மணி, ஆதிநாராயணன் முதலியவர்கள் பேசினார்கள்.

M. N. ஆதிநாராயணன்.

# “வெளியேறு!” என்பதல்ல; “பிரித்து

## எப்படி வெளியேற்றுவது

## வேவல் வலையில் சிக்குவதா? வ

*மாகாண சட்டசபைத் தேர்தல்களில், சில தொகுதிகளில் போட்டி ... கிறது.—ஆம், சுதந்திரக் கட்சியாக நின்று ஜனங்களிடம் தீர்ப்புக் கோருகிற... ரோடும், சில முஸ்லிம் தொகுதிகளில் லீக் அபேட்சகர்களோடும் போட்டி... போட்டி போடாத பொதுத் தொகுதிகளில் பொதுவாக காங்கிரஸ் அபேட்ச... சகர்களையும் ஆதரித்து, கம்யூனிஸ்டுகள் வேலை செய்வார்கள்.*

“இது என்ன விசித்திரமான கொள்கை? காங்கிரசோடும் போட்டி போ... சையும் ஆதரிப்பார்களாம்; லீகையும் ஆதரிப்பார்களாம். இப்படிப்பட்ட ... டுள்ள ஒரு கட்சி, மற்றக் கட்சிகளைக் குற்றம்கூறவும் தலைப்பட்டுள்ளது” எ...

கடந்த ஐந்து ஆண்டுகளாக, நாட்டில் காங்கிரஸ் மகாசபைக்கு ஏற்பட்டுள்ள மகத்தான செல்வாக்கையும், மதிப்பையும் அறியாதவர்களல்ல கம்யூனிஸ்டுகளாகிய நாங்கள். அதைக் கண்டு மட்டில்லா மகிழ்ச்சியும் அடைகிறோம். அதே போன்று இதே காலத்தில், முஸ்லிம் மக்களின் மதிப்பையும், ஆதரவையும் பெற்று, காந்திஜீ ஒப்புக் கொண்டுள்ளது போல முஸ்லிம்களுடைய பிரதான ஸ்தாபனமாக லீக் வளர்ந்துள்ளதையும் நாங்கள் பார்க்கிறோம். அதைக் கண்டும் மகிழ்ச்சியடைகிறோம். அரசியல் விழிப்புப் பெருமலிருந்த முஸ்லிம் மக்கள் இன்று விழித்தெழுந்து, ஒரு ஸ்தாபனத்தை வளர்ப்பதைக் காண நாம் மகிழ்ச்சியடையத்தானே வேண்டும்?

இந்த வளர்ச்சியை நன்கு காண்கிற கம்யூனிஸ்டுகள், தேர்தலில் போட்டி போடுகிறார்கள் என்றால், எந்த நம்பிக்கையின் பேரில் போடுகின்றனர்? அதே சமயத்தில், இரு ஸ்தாபன அபேட்சகர்களையும் ஆதரிக்கின்றனர் என்றால், எந்தக் காரணத்தைக் கொண்டு?

### சொன்னது நடந்தது!

இந்தக் கொள்கைக்கு ஏதாவதோர் காரணம் இருக்கத்தான் வேண்டும் என்பதை சிந்தித்துப் பார்த்தால் ஒத்துக்கொள்ளாமலிருக்க முடியாது. ஏனெனில், கம்யூனிஸ்டுகளை பைத்தியக்காரர்களென்று யாரும் கூறத்துணியமாட்டார்கள். அதுவும், கடந்த மூன்று ஆண்டுகளாக, அவர்கள் கூறிய ஒவ்வொன்றும் நிதர்சனமாக நடந்தேறியிருப்பதைப் பார்த்த பிறகு.

1942 ஆகஸ்டு தீர்மானம் நிறைவேற்றப்படும் காலத்தில், என்ன ஏற்படப்போகிறது என்பதை நாங்கள் எச்சரித்தோம். அதுவே நடந்தது; போராட்டம் என்ற பயமுறுத்தலினால், சுதந்திரம் வந்துவிடாது என்று படித்துப் படித்துக் கூறினோம். பின்னால் நடந்தவை தேச மக்களுக்குத்தெரியும்.

காந்தி-ஜின்னா சந்திப்பின்போது, சம்பாஷணைகள் முறிவதற்கான அம்சங்கள் இரு தலைவர்களின் மனோபாவத்திலும் என்னென்ன இருக்கின்றன, வெற்றியடைய வேண்டுமாயின் என்ன செய்ய வேண்டும் என்பதை எடுத்துக் காட்டினோம். கூறியது அப்படியே நடந்தது.

சிம்லா மகாநாடு நடப்பதற்கு இரண்டு வாரங்களுக்கு முன்னமேயே நாம் எச்சரிக்கை செய்தோம். வேவல் திட்டத்தின் முக்கிய அம்சமாகிய ஜாதி ஹிந்து-முஸ்லிம் சமத்துவம் என்ற சூத்திரம், ஏகாதிபத்தியத்தின் பிரித்தாளும் சூழ்ச்சி என்பதை எச்சரித்தோம். ஏகாதிபத்தியம் சமரசத்தை நாடுகிறது என்ற ஏமாற்றத்திலிருக்க வேண்டாம் என்று எச்சரித்தோம். இந்த சூத்திரத்தைக் கொண்டே, காங்கிரசையும் லீகையும் ஒன்றோடொன்று சண்டையிடச் செய்து, சமரசத்தை தவிர்க்க சர்ச்சில்-ஏமரி கோஷ்டி சூழ்ச்சி செய்தது என்பதை எச்சரித்தோம். துரதிருஷ்டவசமாய் நம் எச்சரிக்கை செவிடன் காதில் ஊதிய சங்குமாதிரி அன்று காங்கிரஸ், லீக் தலைவர்களுக்குப் பட்டது பலன் என்ன ஏற்பட்டது? நாம் என்ன ஏற்படப் போகிறது என்று எச்சரிக்கை செய்தோமோ, அதுவே நடந்தது.

### ஏன் இதை சொல்கிறோம்?

நல்ல அரசியல் ஜோஸ்யர்கள் என்ற பெயர் வாங்க வேண்டுமென்பதற்காக அல்ல இவ்வளவையும் ஞாபகப் படுத்துகிறேன். அதனால் ஒரு பெருமையும் நாங்கள் அடையவில்லை. அதற்கு மாறாக, நம் குரல் அன்று பலமாகக் கேட்கவில்லையே; நம் யோசனை ஏற்கப்பட்டு, இன்றுள்ள நிலைமை இல்லாது, நம் தலைவர்களைக் கொண்ட பொறுப்பு வாய்ந்த அரசாங்கம் இல்லையே; “குவிட் ஏஷியா” என்ற கோஷத்தைக் கொடுக்கிறோமே யல்லாது, பக்கத்திலுள்ள ஆசிய மக்களின் சுதந்திர இயக்கத்தை நசுக்க நம் நாட்டுத் துருப்புகள் உபயோகப் படுத்தப்படுவதைக் கண்டு வாளாயிருக்க வேண்டியிருக்கிறதே! ஸிம்லா மகாநாட்டில், நம் கை ஓங்கி நின்றிருக்குமானால், வேவல் தலைவனாய் விளங்கியிருந்ததற்கு பதிலாக நம் தலைவர்களுடைய ஒற்றுமைப் பட்டுள்ள கரங்களுக் கிடையே கட்டுண்டு, கைதியான நிலைமை ஏற்பட்டிருந்தால் இன்று இப்படிப்பட்ட நிலைமை ஏற்பட்டிருக்குமா?...... இவைகளை நினைத்தால் எங்களுக்கு ஏற்படும் வருத்தம் சொல்லத் தரமுல்ல.

அரசியல் துறையில் பைத்தியக்காரர்களல்ல கம்யூனிஸ்டுகளாகிய நாங்கள் என்பதை எடுத்துக்காட்டுவதற்குத்தான் இவ்வளவையும் ஞாபகப்படுத்துவது.

### எப்படி முக்யத்வம் வாய்ந்தது?

யதார்த்தமான நிலைமையை உணர்வதால்தான், இந்தத் தேர்தலில் எழுந்துள்ள பிரச்சினைகளை நன்கு உணர்வதனால்தான், அந்தப் பிரச்சினைகளைத் தீர்க்க சரியான வழி நாங்கள் காட்டுகிறோம் என்ற பூர்ண நம்பிக்கை இருப்பதனால்தான் நாங்கள் மேற்கூறிய கொள்கையை இந்தத் தேர்தலில் கடைப்பிடிக்கிறோம்.

இந்தத் தேர்தல்கள், நம் நாட்டின் சரித்திரத்திலேயே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை; இதுவரை நடந்த மற்றெல்லாத் தேர்தல்களையும்விட முக்கியத்துவம்வாய்ந்தவை.

இதை காங்கிரஸும் உணர்கிறது. லீகும் உணர்கிறது; பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமும் உணர்கிறது.

ஏன்? சிம்லா மகாநாடு முறிந்தவுடன் தேர்தல்களை நடத்த வேண்டும் என்று காயிதே ஆஜம் ஜின்னா கோரினார்.

“சாதாரணமாக தேர்தல்களில் நான் அவ்வளவு அக்கரை கொள்பவனல்ல, ஆயினும் இந்தத் தேர்தல்கள் மிகவும் முக்கியமானவை. ஏனெனில், பிறகு நாட்டின் அரசியலை வகுப்பதற்காக ஏற்படப்போகும் ஸ்தாபனத்திற்கும், இந்தத் தேர்தலுக்கும் நெருங்கிய சம்பந்தமிருக்கலாம்” என்று பல தடவை ஜவாஹர்லால்ஜி பேசியிருக்கிறார்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமோ, தனக்குச் சாதகமாக இந்தியப் பிரச்சினையைத் தீர்க்க இதே தேர்தல்களை நம்பியிருக்கிறது.

### காங்கிரஸ்-லீக் கண்ணோட்டம்

காங்கிரஸ் இந்தத் தேர்தலில் மக்களின் முன் வைக்கும் பிரச்சினை என்ன?

“குவிட் இந்தியா”

“வெளியேபோ” என்ற பிரச்சினை.

முஸ்லிம் லீக் வைக்கும் பிரச்சினை என்ன?

“பிரித்துப் போட்டுவிட்டு வெளியே போ” (Divide and Quit) என்ற பிரச்சினையை முஸ்லிம் மக்களின் முன் வைக்கிறது.

வேடிக்கை என்ன வென்றால், காங்கிரஸ் தன்னுடைய கோஷத்தை நேரடியாக முஸ்லிம் மக்களிடம் வைப்பது கிடையாது. மத்திய சட்ட சபைத் தேர்தல்களில்; முஸ்லிம் தொகுதிகளில், காங்கிரஸ் அபேட்சகர்களை நிறுத்தாமலிருப்பதே இதற்குச் சான்று.

லீகும், தன்னுடைய கோஷத்தின் அடிப்படையில், முஸ்லிம் மக்களிடம்தான் வாக்குக் கோரப்போகிறது. கூட்டுத் தொகுதிகளில், அது தேர்தலுக்கு யாரையும் நிறுத்தப் போவதில்லை!

அப்படியானால் இரண்டு ஸ்தாபனங்களும் தத்தம் லட்சியத்தை இத்தேர்தல்களின் மூலம் எப்படி நிறைவேற்ற முயற்சிக்கின்றன?

பெருவாரியான முஸ்லிம்கள் லீகை ஆதரிக்கின்றனர் என்பதை இந்தத் தேர்தல்கள் மூலம் நிரூபிக்க முயற்சிக்கிறது லீக். அது நிரூபிக்கப்பட்டால், பிரிட்டிஷ் சர்க்கார் பாக்கிஸ்தானை ஒத்துக் கொண்டுதானே ஆகவேண்டும் என்று எண்ணுகிறது லீக் தலைமை!

காங்கிரஸ் தலைமையோ, லீகை எதிர்த்து காங்கிரஸின் சார்பாக யாரையும் நிறுத்தமுடியாமற்போனாலும், லீகை எதிர்ப்பவர்கள் யாராயிருந்தாலும், —25 வருஷங்களாக பஞ்சாபில் பயங்கர அடக்கு முறை ஆட்சி நடத்திய ஏகாதிபத்திய ஏஜெண்டுகளான யூனியனிஸ்டுகள் முதற்கொண்டு, ‘பாக்கிஸ்தான்’ என்பது நவீன ஜனநாயகத்தை அடிப்படையாகக் கொண்ட ராஜ்யமாயிருக்கும் என்று கூறுகிறார் ஜின்னா, “அது கூடாது, அப்பட்டமான குர்-ஆன் ஷாரியத்தின் மதக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்ட இஸ்லாமிய ராஜ்யம் வேண்டும்” என்று கோஷமிடும் அஹ்ரார்கள் வரை, இடையிலுள்ள காக்ஸார்கள், ஜமீயத்-உல் உலேமா, ஷீயா மகாநாட்டுக்காரர்கள், மோம்மீன் தலைவர்கள் என்று கூறுபவர்கள், கிருஷக் பிரஜா கட்சியினர் முதலிய எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாயினும் சரி, அல்லது “காயிதே ஆஜம் ஜின்னாவுக்கு வேலைத் தொந்திரவுகள் அதிகம்; ஆகவே அவர் மத்திய சட்டசபைக் கூட்டங்களுக்குச் சரியாக வர முடியவில்லை; ஆகவே எனக்கு வோட்டுப் போடுங்கள்” என்று கூறும் எவ்விதக் கொள்கையுமில்லாத ஹுஸேன்பாய் லால்ஜியைப் போன்றவர்களாயினும் சரி, யார் லீகை எதிர்த்தாலும் அவர்களை ஆதரிப்பது என்ற கொள்கையை காங்கிரஸ் தலைவர்கள் கடைப்பிடிக்கின்றனர். லீகுக்கு மெஜாரிட்டி முஸ்லிம் ஸ்தானங்கள் இல்லாமற்போனால், பாகிஸ்தான் கோஷம் செத்துப் போய்விடும்; நம்முடன் தானே பிரிட்டிஷ் சர்க்கார் சமரசம் செய்து கொள்ளவேண்டும் என்று நினைக்கின்றனர், காங்கிரஸ் தலைவர்கள்!

தேர்தல் முடிவை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் ஒத்துக்கொள்ளும் என்ற அபார நம்பிக்கை இரு ஸ்தாபனத் தலைமைகளுக்கும்!

### ஏகாதிபத்தியம் என்ன நினைக்கின்றது?

இன்றைய நிலைமையில்—உலகமெங்கும் சுதந்திர சக்திகளின் அலைகள் மோதிக்கொண்டிருக்கையில்—பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பழைய முறைகளில் இந்தியாவில் ஆட்சி நடத்திக்கொண்டிருக்க முடியாது என்பதை இரண்டு தலைமைகளும் பார்ப்பது சரியே. ஆனால். ஏகாதிபத்யம் தானாகவேமறைந்து விடாது—இதே தேர்தல்களின் மூலம் தன்னுடைய ஆட்சியை நீடிக்க அது முயற்சிக்கிறது என்பதைத்தான் இரு தலைமைகளும் பார்க்க மறுக்கின்றன.

கொள்கைப்பிடிப்பற்ற, கண்ட பேர்களையெல்லாம் கொண்டு லீகை கவிழ்த்துவிடலாம் என்பது வெறும் பகற்கனவு. இது அப்பட்டமான கொள்கையற்ற சந்தர்ப்ப வாதமாகும். சந்தர்ப்பவாதம் என்றைக்கும் ஜெயித்ததில்லை. இந்த முறையினால், முஸ்லிம் மக்களுக்கு ஆத்திரமேற்படுமேயன்றி வேறு எவ்வித பலனும் கிடைக்கப் போவதில்லை.

அதேபோன்று, தேர்தல்களில் பெருவாரியான முஸ்லிம் ஸ்தானங்களைக் கைப்பற்றி விட்டதினால், பிரிட்டிஷ் சர்க்கார் பாகிஸ்தானைக் கொடுத்து விடுவார்கள் என்ற லீக் தலைவர்களின் நினைப்பும், மிதவாதிகளின் பகற்கனவுகளைப் போன்றுதான் முடியும்.

இந்த வழியில் தேசம் போய்க் கொண்டிருந்தால், “குவிட் இந்தியாவும்” நிறைவேறாது—டிவைட் அண்டு குவிட்’ என்ற லீகின் கோஷமும் நிறைவேறாது.

பிரிட்டிஷ் சர்க்கார் கூறும் போடுவார்கள்; அதே சமயத்தில் வெளியேறவும் மாட்டார்கள்.

ஏன் இவ்வாறு கூறுகிறோம்? இந்தத் தேர்தல்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் திட்டப்படியே நடக்கின்றன என்பதை ஞாபகப் படுத்திக் கொள்வோம். தேர்தலுக்குப் பிறகு யோசனை கேட்கப் போகிறார் லார்டு வேவல். மற்றுமோர் சிம்லா மகாநாடு நடக்கும். அங்கு ஒற்றுமை ஏற்படாவிட்டால், அரசியலை நிர்ணயிப்பதற்காக, சட்ட சபைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்ட அங்கத்தினர்கள்மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிறு சபை கூட்டப்படும். இந்த ஸ்தாபனம் எப்படி அரசியலை நிர்ணயிக்கும்? ஒற்றுமைக்கான அடிப்படையே இல்லையே!

வாய்ச்சண்டைகளுக்குப் பிறகு பிரிட்டிஷ் சர்க்கார், மத்தியஸ்தத்திற்கு வருவார்கள். ராம்ஸே மாக்

## பி. ராம

டொனல்டின் வகுப்புத் தீர்ப்பைப் போன்ற தீர்ப்பு ஏற்படும். யாரையும் திருப்திபடுத்தாத தீர்ப்பு; என்றைக்கும் சண்டை பூசல்களின் விதையாயிருக்கும் தீர்ப்பு.

### உண்மைப் பிரச்சினை: வேவல் சதியை முறியடிப்பது!

அந்தத் தீர்ப்பின் படம் ஏற்கனவேயே வரைந்தாய் விட்டது. கூப்லந்து திட்டம்தான் அது. பாகிஸ்தானும் கிடைக்கும்—ஆனால் லீகை ஆதரிக்கும் முஸ்லிம் மக்களின் அபிலாஷையான சுதந்திர பாகிஸ்தானல்ல. ஐக்கிய இந்தியாவும்கிடைக்கும். ஆனால் காங்கிரஸ் விரும்பும் சுதந்திர ஐக்கிய இந்தியா அல்ல; பிரிட்டிஷ் ஏஜென்ஸி கேந்திரத்தினால் இணைக்கப்பட்ட ஐக்கிய இந்தியா கிடைக்கும்.

இந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்திய திட்டம்தான் இந்த தேர்தலில் முன் நிற்கிறது; இதுதான் வைசிராய் வேவலின் திட்டம்.

இந்த திட்டத்திற்கு மாறாக, வேறெந்த திட்டத்தையும் இன்று காங்கரஸோ, லீகோ, மக்களின் முன் வைக்கவில்லை.

வைசிராய் திட்டத்தை முறியடிக்க முடியும் என்று கூறுகிறது கம்யூனிஸ்டுக் கட்சி அதற்கான திட்டத்தையும் மக்களின் முன் அது இந்தத் தேர்தலில் சமர்ப்பிக்கிறது.

### கம்யூனிஸ்டுகள் காட்டும் பாதை

வேவல் திட்டத்திற்கு எதிராக, அது வைக்கும் திட்டம் என்ன?

நம் நாட்டிலுள்ள ஒவ்வொரு தேசிய இனங்களும்—தமிழர்கள், ஆந்திரர்கள், மலையாளிகள், கன்னடயர்கள், மஹாராஷ்டிரர்கள், குஜராத்திகள், ஹிந்துஸ்தானிகள், பீஹாரிகள் முதலிய ஹிந்து தேசீய இனங்களும் சரி, எல்லைப்புறத்து பட்டாணியர்கள், பலுஜிகள், சிந்திகள், மேற்கத்திய பஞ்சாபிகள் முதலிய முஸ்லிம் தேசிய இனங்களும் சரி, மத்திய பஞ்சாபிலுள்ள சீக்கிய இனமும் சரி, வங்காளிகள், அஸ்ஸாமிகள் போன்ற தேசீய இனங்களும் சரி, தத்தம் அரசியல் நிர்ணய சபைகளை வயதுவந்தவர்களைக்கொண்டு தேர்

இன்று குதூகலிக்கிறார்கள் ......

# ...ந்துவிட்டு வெளியேறு!" என்பதுமல்ல!

## ...றுவது என்பதே பிரச்சினை!

## ...வதா? வலையைக் கிழித்தெறிவதா?

...தொகுதிகளில் போட்டி போடுவது என்று கம்யூனிஸ்டுக் கட்சி முடிவு செய்திருக்... தீர்ப்புக் கோருகிறது; பொதுத் தொகுதிகளில் சிலவற்றில் காங்கிரஸ் அபேட்சக...களோடும் போட்டி போடப்போகிறது கம்யூனிஸ்டுக் கட்சி. கம்யூனிஸ்டுகள் ...காங்கிரஸ் அபேட்சகர்களையும், முஸ்லிம் தொகுதிகளில் பொதுவாக லீக் அபேட்...கள்.

...சோடும் போட்டி போடுவார்களாம்; லீகோடும் போட்டி போடுவார்களாம்; காங்கிர...ம். இப்படிப்பட்ட ஒரு திட்டவட்டமில்லாத வழவழாக் கொள்கையைக் கொண்...லைப்பட்டுள்ளது" என்று சிலர் கூறுகின்றனர்.

...ம், மிதவாதி
...ப் போன்று
...சம் போய்க்
...பிட் இந்தியா
...து— டிவைட்
...கின் கோஷ
...ார் கூறும்
...சமயத்தில்
...ர்கள்.
...றுகிறோம்?
...பிரிட்டிஷ்
...ட்டப்படியே
...த ஞாபகப்
...தேர்தலுச்
...கேட்க
...யல் மற்று
...நடக்கும்.
...டாவிட்டால்,
...ப்பதற்காக,
...ர்ந்தெடுக்கப்
...லம் தேர்ந்
...சிறு சபை
...ாபனம் எப்
...ணயிக்கும்?
...டப்படையே
...துப் பிறகு
...த்தியஸ்தத்
...ம்ஸே மாக்

...தெடுக்கட்டும். வங்காளம் சம்பந்தப்பட்டவரையில், ஹிந்துக்கள் நிறைந்த மேற்கு வங்காளிகளும், முஸ்லிம்கள் நிறைந்த கிழக்கு வங்காளிகளும் ஒரே அரசியல் நிர்ணய சபையை விரும்புகின்றனரா அல்லது தனித்தனி அரசியல் நிர்ணய சபையை விரும்புகின்றனரா என்பதைப்பற்றி அவர்களே முன்கூட்டியே வோட் எடுப்பதன்மூலம் தீர்த்துக்கொள்ளட்டும்.

- சமஸ்தான மக்களும் சர்வஜன வாக்குரிமையும், சுயநிர்ணய உரிமையும் பெற்று, தங்கள் தலைவிதியை அவர்களே நிர்ணயித்துக் கொள்ளட்டும்.

இந்த அரசியல் நிர்ணய சபைகள், சுயேச்சையாக, மனப்பூர்வமாக, யார் யாருடன், எந்தெந்த ஷரத்துக்களின் பேரில் ஒன்று சேர்வது என்று முடிவு செய்யட்டும்.

இதுதான் வேவல் திட்டத்திற்கு எதிராக நாங்கள் வைக்கும் திட்டம்.

- லீகின் பாக்கிஸ்தான் கொள்கையின் சாராம்சம் இதில் அடங்கியிருக்கிறது—முஸ்லிம் தாயகங்களிலுள்ள மக்கள், சுதந்திரர்களாக அரசியல் நிர்ணய சபையைத் தேர்ந்தெடுப்பார்கள்; சரிநிகர் சமத்துவ அந்தஸ்தோடு,

## ...ராமமூர்த்தி.

...தீர்ப்பைப்
...ம். யாரை
...ர்ப்பு; என்
...சல்களின்
...ி.

...னை:

...படிப்பது!

...ம் ஏற்கன
...டது. கூட்
...து. பாகிஸ்
...ல் லீகை
...களின் அபி
...பாகிஸ்தா
...வும்கிடைக்
...விரும்பும்
...ா அல்ல;
...கேந்திரத்
...ஐக்கிய
...காதிபத்திய
...தலில் முன்
...வைசிராய்
...மாருக,
...ம் இன்று
...மக்களின்
...முறியடிக்க
...றது கம்யூ
...கான திட்
...மூன் அது
...ிக்கிறது.
...ம் பாதை

ஏனைய அரசியல் நிர்ணய சபைகளுடன் ஒப்பந்தம் செய்துகொள்வார்கள்.

- காங்கிரஸ் மகாசபை பாகிஸ்தான் பிரச்சினையில் கிளப்பிய ஜனநாயக தத்துவமும் இதில் அடங்கியிருக்கிறது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் நிர்ணய சபைகளின் அபிப்பிராயம் பொதுஜன அபிப்பிராயம் அல்லவா?

- இதுமாத்திரமல்ல. இன்று பாக்கிஸ்தான் பிரச்சினை தீவிரப்பட்டிருக்கிறது. ஆனால், இன்று ஆந்திரா-தமிழ், மகாராஷ்டிரா-குஜராத்தி, வங்காளி-அஸ்ஸாமி, மகாராஷ்டிரா-ஹிந்தி என்ற பல தேசிய இனங்களிடையே பூசல்கள் வளர்ந்து குமுறிக்கொண்டிருக்கின்றன. இவையனைத்தும் வளராமல், தவிர்ப்பதும் இதனால் சாத்தியமாகிறது.

- சமஸ்தானத்து மக்களின் பூர்ண உரிமையும் இதனால் அங்கீகரிக்கப்படுகிறது.

இந்த முறையில் ஏற்படும் அரசியல் நிர்ணய சபைகளினால் நாடு பிளவுபடாது என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு. பூர்ண சுதந்திரமும், சமத்துவமும் ஏற்றுக்கொண்ட பிறகு, தமிழர்கள் ஆந்திரர்களின்மீது ஆதிக்கம் செலுத்துவர்கள் என்றோ, ஹிந்துக்கள் முஸ்லிம்களின்மீது ஆதிக்கம் செலுத்துவார்கள் என்றோ பயம் இல்லாமற் போய்விடும். அந்த நிலையில், நம் மக்கள், ஒன்றுகத்தானே நிற்பார்கள்? மனப்பூர்வமாக, சுதந்திரமாக, ஜனநாயக முறையில் ஏற்படும் ஐக்கியமாக இருக்கும் அது. அந்த ஐக்கிய இந்தியாவின் சக்தியை யாராலும் எதிர்த்து நிற்க முடியாது என்பது எங்கள் துணிபு.

### தேர்தலில் ஏன் நிற்கிறோம்?

இந்தத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமாயின், வேவல் திட்டத்தை முறியடிக்க வேண்டுமாயின், காங்கிரசும் லீகும் ஏற்றுக்கொண்டு, ஒன்றாய் நின்றால் தானே முடியும்?

இரண்டும் தேசத்தின் மிகப்பெரிய ஸ்தாபனங்கள், இரண்டிற்கும் பின்னே கோடிக்கணக்கான மக்கள் நிற்கின்றனர். அம் மக்களின் முன்பு இத் திட்டத்தை சமர்ப்பிக்கிறோம் அவர்களின் ஆதரவைக் கொண்டே. இரண்டு ஸ்தாபனங்களின் தலைமைகளையும் இந்தத் திட்டத்தை ஏற்றுக்கொள்ளும்படி செய்யமுடியும் என்பது எங்கள் அசையாத நம்பிக்கை. இரண்டு தலைமைகளும், ஜனநாயக அபிப்பிராயத்திற்குக் கட்டுப்படும் தலைவர்களைக் கொண்டவைதானே?

இத் திட்டத்திற்கு ஆதரவு தேடுவதற்கு, இத் தேர்தலில் கலந்துகொள்ளாமலிருக்க முடியுமா? நாட்டில் காங்கிரஸிலிருந்து லீக்-எதிர்ப்புப் பிரச்சாரமும், லீகிலிருந்து காங்கிரஸ்-எதிர்ப்புப் பிரசாரமும் நடப்பதை சும்மா பார்த்துக்கொண்டிருக்க முடியுமா? அது கலகப் பாதையில்தான் கொண்டுபோய்விடும். அதன் விளைவுகளை கடந்த ஒரு மாதமாக நிதர்சனமாகக் காண்கிறோம். இரண்டு ஸ்தாபனங்களும் தூண்டிவிடும் உள்நாட்டு கலகத் தீயை அணைக்கவே, சுதந்திரர்களாக தேர்தல்களில் கம்யூனிஸ்டுகளாகிய நாங்கள் நிற்கிறோம்.

### எதற்காக ஒரு சில இடங்களில் மட்டும்?

காங்கிரசுக்கும், லீகுக்கும் பிறகு, தேசத்தில் மூன்றாவது கட்சியாக நாங்கள் இருக்கிறோம். ஆயினும், தேசம் பூராவிலும் நாங்கள் வேலை செய்யவில்லை. எல்லா இடங்களிலும் மக்கள் எங்களைத் தெரிந்துகொள்ளக்கூடிய அளவிற்கு வேலை செய்யவில்லை. அதனால்தான், எந்தெந்த இடங்களில், மக்களின் சேவையின் மூலம், பொதுமக்களுக்கு நன்கு நாங்கள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளோமோ, அங்கு மாத்திரம் நாங்கள் தேர்தலுக்கு நின்று நேரடியாக மக்களிடம் இத் திட்டத்தை வைத்து, அவர்களுடைய தீர்ப்பைக் கோருகிறோம்.

### கலகப்பாதையைவிட்டு எப்படி திருப்புவது?

மற்ற இடங்களில், கட்சி அங்கத்தினர்கள் காங்கிரசையோ, லீகையோ ஆதரிப்பார்கள் என்றால், லீக் எதிர்ப்புப் பிரசாரத்திலோ, காங்கிரஸ் எதிர்ப்புப் பிரசாரத்திலோ இறங்கமாட்டார்கள். சுதந்திரமாக நின்று, இத்திட்டத்தைப் பிரசாரம் செய்து, காங்கிரஸ்காரர்களையும், லீகர்களையும் பரஸ்பரம் வசைப் புராணம் பாடுவதை விட்டுவிட்டு இத்திட்டத்திற்கு ஆதரவளிக்கும்படி கோருவார்கள்.

அதே போன்று, சுதந்திர இந்தியாவின் பொருளாதாரத் திட்டத்தைப் பற்றிய படத்தையும் வரைந்து மக்களின் ஆதரவைத் தேடுகிறோம்.

சுதந்திர இந்தியா சுபிட்சம் நிறைந்த இந்தியாவாகத் திகழ்வதற்கான பொருளாதார அஸ்திவாரத்திற்கான திட்டத்திற்கு காங்கிரஸ்காரர்கள், லீகர்கள் ஆகியோர்களின் ஆதரவைத் தேடுகிறோம்.

உடனடியாக, தேர்தலுக்குப் பிறகு ஏற்படும் மந்திரி சபைகள் செய்யவேண்டிய வேலைத் திட்டங்களைப்பற்றியும்—வேலையில்லாத் திண்டாட்ட பிரச்னை போன்ற உடனடிப் பிரச்னைகளிலும்—மக்களின் ஆதரவைத் தேடுவோம். சட்ட சபைகளில், இத்திட்டங்களை நிறைவேற்றுமாறு மந்திரி சபைகளை வற்புறுத்துவோம். தொழிற் சங்கங்கள், கிஸான் சபைகள் முதலிய ஜனநாயக ஸ்தாபனங்களின் பலத்தைக்கொண்டு, இவைகளை நிறைவேற்ற ஆதரவு தேடுவோம்.

### 'பீப்பிள்ஸ் ஏஜ்'!

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் கமிட்டியால் ஆங்கிலத்தில் பிரசுரிக்கப்படும் வாரப் பத்திரிகையான 'பீப்பிள்ஸ்வார்', இனி 'பீப்பிள்ஸ் ஏஜ்' என்ற புதிய பெயரில் வெளிவரும். மக்கள் சகாப்தத்தின் தொடக்கத்தைக் குறிக்கவே இப்புதிய பெயர்.

## ...... ஆனல் அழுது மடியச் செய்ய முடியும்

### எப்படி வெளியேறச் செய்வது? இதுதான் பிரச்சினை

இதுதான் இன்று வேவல் திட்டத்திற்கு எதிரான மக்களின் திட்டம். இந்தத் திட்டத்திற்கு தேசமக்களின் ஆதரவைத் தேடி, அதன் பலத்தில் காங்கிரசும், லீகும் இதை ஏற்றுக்கொள்ளச் செய்யமுடியும் என்ற பரிபூரண நம்பிக்கையுடன் தேர்தலில் இறங்குகிறோம். இதுதான், காங்கிரஸ்-லீக்-கம்யூனிஸ்ட் ஒற்றுமை என்பதன் அர்த்தம். ஜனநாயக திட்டத்தின் அடிப்படையில் பரஸ்பர அவநம்பிக்கைகளை விட்டொழித்து, பரஸ்பர நட்புடன் பரஸ்பர உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுத்து, தேசத்திலுள்ள எல்லாப் பகுதியினரும் ஏகாதிபத்தியத்திற்கு எதிரே ஒன்றுபட்டு நிற்கும் "வெளியேறு" என்ற பிரச்சினையில் மக்களின் அபிப்பிராயம் கேட்பதல்ல, இன்றுள்ள பிரச்சினை. "கூறு போட்டு வெளியேறு" என்ற பிரச்சினையில் முஸ்லிம் மக்களின் அபிப்பிராயம் கேட்பதுமல்ல இன்று உள்ள பிரச்சினை. எப்படி வெளியேறச் செய்வது? கோடானுகோடி ஹிந்து மக்களின் ஜனநாயக உணர்ச்சிக்கு சுதந்திர உணர்ச்சிக்கு விரோதமானதல்ல பாக்கிஸ்தான் என்பதை அவர்கள் எப்படிப் பார்க்கும் வண்ணம் செய்வது என்பதே இன்றுள்ள பிரச்சினை.

தேர்தலில் இந்த வகையில் பங்கெடுத்துக் கொள்வதன்மூலம்தான், இன்று நாட்டில் கிளப்பிவிடப்படும் உள்நாட்டு கலக ஜ்வாலைகளை அணைக்க முடியும். அதுதான் இன்றுள்ள மிகப் பெரிய தேச பக்திக் கடமை என்று நாங்கள் உணர்கிறோம்;

நாங்கள் வைக்கும் திட்டம் தேசியத் திட்டம். அதில் பரிபூரண நம்பிக்கை யுண்டு.

— மக்களின் ஜனநாயக உணர்ச்சியில் நம்பிக்கை யுண்டு.

— மக்களின் சமத்துவ உணர்ச்சியில் நம்பிக்கை யுண்டு, மக்களின் சகோதர உணர்ச்சியில் நம்பிக்கை யுண்டு. மக்களின் நியாய உணர்ச்சியில் நம்பிக்கை யுண்டு.

— நாம் விரும்புவது சொந்த கட்சி பலமல்ல, தேசத்தின் பலத்தையே நாடுகிறோம் என்பதையும் உணர்கிறோம்.

### எங்கள் வெற்றி வேவல் திட்டத்தின் தோல்வி

இந்த நம்பிக்கையினால்தான் தேர்தலுக்கு நாங்கள் நிற்கிறோம்.

அவதூறுக்கு அஞ்சோம்; அவதூறுகளுக்கு பதில் அவதூறுப் பிரசாரத்திலும் இறங்க மறுக்கிறோம்:-

காங்கிரஸ் வாதிகளின் தயவிற்காக லீக் எதிர்ப்பிலும் இறங்கமறுக்கிறோம்.

லீகர்களின் தயவிற்காக காங்கிரஸ் எதிர்ப்பிலும் இறங்க மறுக்கிறோம்.

தன்னலமற்ற தியாகிகள் நிறைந்த கட்சி எங்கள் கட்சி என்ற பெருமை எங்களுக்குண்டு.

தீவாந்தர சிட்சை பெற்ற தோழர்கள் மிகவும் அதிகம் நிரம்பிய கட்சி எங்களுடையது என்ற பெருமையும் எங்களுக்குண்டு.

தேச சேவையையுமே, மக்கள் சேவையையுமே இரவு பகலாய் செய்து வரும் ஊழியர்கள் நிரம்பக் கொண்ட கட்சி என்ற பெருமையும் உண்டு.

கடந்த மூன்றாண்டுகளாக, பலத்த அவதூறுகளுக்கிடையே, ஏகாதிபத்திய அடக்குமுறைகளுக்கிடையே, மக்களின் செல்வாக்குப் பெற்று வளர்ந்த கட்சி என்ற பூரண உணர்ச்சியும் உண்டு.

இவையனைத்தும், இவ்வெல்லாவற்றையும்விட நம் நாட்டின் எதிர்காலத்தில் பூரண நம்பிக்கையும், நம் கொள்கையிலுள்ள பிடிப்பும், நிச்சயம் மக்களின் ஆதரவு பெறுவோம் என்ற நம்பிக்கையை யூட்டுகின்றன.

—எங்கள் வெற்றி—மக்களின் வெற்றி—வேவல் திட்டத்தின் அழிவு.

### "பிரஜா சக்தி" தினசரி!

கம்யூனிஸ்டுக் கட்சியின் ஆந்திர மாகாணக் கமிட்டியால் நடத்தப்படும் "பிரஜா சக்தி" என்ற தெலுங்கு வாரப் பத்திரிகை கூடியசீக்கிரம் தினசரி பத்திரிகையாக வெளிவருகிறது. கடந்த இரண்டு வருடங்களாக அதை தினசரியாக்க முயற்சி நடந்துவந்தது. மாகாண சர்க்காரும், மத்திய சர்க்காரும் மறுத்து வந்தார்கள். இப்பொழுதுதான் அனுமதி கிடைத்திருக்கிறது.

சொத்துள்ள கட்சி அங்கத்தினர்கள் சொத்தை விற்று பணம் கொடுக்கிறார்கள். பொதுஜனங்களும் விவசாயிகளும் நிறைய பணம் கொடுத்திருக்கிறார்கள். இதற்குள் 80 ஆயிரம் ரூபாய் வசூலித்து விட்டனர். இதுவரை 5 லட்ச ரூபாய்க்கு பொது ஜனங்களும் கட்சி அங்கத்தினர்களும் வாக்குறுதியளித்திருக்கின்றனர். இன்னும் இரண்டொரு மாதங்களில் இந்தத் தொகை பூராவும் வசூலாகிவிடும்.

அச்சுக்கூடம் அமைப்பதற்கும் தனியாக நிலம் வாங்கி ஒரு கட்டடம் கட்டப்பட்டுவிட்டது.

பொதுஜன மூலதனத்தால், பொதுஜன ஊழியர்களால் இந்தியாவில் நடத்தப்படும் முதல் தினசரி பத்திரிகை 'பிரஜா சக்தி'! தொழிலாளிவர்க்கம் புது உலகை நிர்மாணித்த இப்புனித தினத்தில் பெரிய அளவில்—புதிய உருவத்தில்—பொதுஜன சேவையைத் தொடங்க அனுமதி பெற்றிருக்கும் 'பிரஜா சக்தி'க்கு நம் மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்! வாழ்க பிரஜா சக்தி!

சென்றவாரம் ஜவஹர்லால் நேரு பேசினார். "அடிமை நாடுகள் சுதந்திரமடைவதற்கு சாதகமாகவே சோவியத் யூனியன் எப்போதும் பேசி இருக்கிறது" என்று சொன்னார். இந்த செய்தியை அப்படியே தலைகீழாகப் புரட்டி, "அடிமை நாடுகளுக்காக சோவியத் யூனியன் பேசியதே இல்லை என்று ஜவஹர் கூறினார்" என்று ஆந்திர பத்திரிகா என்ற தினசரி பிரசுரித்தது. இத்தகைய தில்லுமுல்லுகளை அம்பலத்திற்கிழுத்துவிடும் பிரஜா சக்தி! ஆந்திர மக்கள் இனி பொய் செய்திகளை படிக்கவேண்டியதில்லை! உண்மைச் செய்திகளைப் படிப்பார்கள்! தமிழ் நாட்டு மக்கள் என்றைக்கு இந்த பாக்கியத்தைப் பெறுவார்களோ?

## அங்கே ★ ★ ★

# "எவ்வளவு பேர் வந்தாலும் சரி, வேலை தருகிறோம்!"

"ஒவ்வொரு வாலிபனுக்கும் ஒரு வேலை காத்திருக்கிறது. தொழிற்சாலைகளும், வயல்களும் அவர்களை எதிர்நோக்கி வரவேற்கிறது. சோவியத் ரஷ்யாவில் வேலையில்லை என்ற பேச்சுக்கு இடமேயில்லை. செய்யவேண்டிய வேலைக்கு எல்லையில்லை. அதை நிறைவேற்றுவதற்கு வேண்டிய அபூர்வ திட்டம் இருக்கிறது" என்று காண்டர்பரி பாதிரியார் எழுதுகிறார். அவர் பெயர் டாக்டர் ஹூலட் ஜான்ஸன். அவர் சமீபத்தில் சோவியத் ரஷ்யாவுக்கு சென்று அங்கு கண்டவற்றையும், தனக்கு ஏற்பட்ட உணர்ச்சியையும் இக் கட்டுரையில் விளக்கி யிருக்கிறார். ரஷ்யாவில் யுத்த பிற்கால புனர்நிர்மாணம் எப்படி நடக்கிறது! நம் நாட்டில் எப்படி நடக்கிறது? நீங்களே ஆராய்ந்து முடிவுக்கு வாருங்கள். (ஆ-ர்.)

"அமெரிக்க நடிகை சோவியத் நாட்டைப்பற்றி, அடக்கமானது, அபூர்வமானது, பிரமாண்டமானது, என்று சொன்னாள்.

அவள் சொன்னதை நான் மறுக்க மாட்டேன். குறிப்பாக பிரமாண்டமானது என்பதை ஏற்றுக் கொள்கிறேன். பிரச்சினைகளுக்கு வழி காண வேண்டியது பிரமாண்டமானது. புனர்நிர்மாணத்திற்கு வேண்டிய சக்தியும் பிரம்மாண்டமானதாக இருக்கிறது.

மாஸ்கோவிலிருந்து ப்ரேக் வரை ஆகாய விமானத்தில் 8-மணி நேரத்தில் பறந்து சென்றேன். மரம் உயரத்திற்கு விமானம் பறந்து சென்றது. கண்கண்ட இடமெல்லாம் நரகத்தையொத்த அழிவையே கண்டேன் இது போன்ற அழிவு ஐரோப்பாவில் வேறெங்கும் நான் காணவில்லை.

லெனின் கிராட் மனம் விம்மும் அளவுக்கு அழிந்து கிடந்தது. ராஸ்டாவிலும், கார்காவிலும் தொழிற்சாலைகள் தரைமட்டமாக கிடக்கின்றன. ஸ்டாலின் கிராட் செங்கல் காளவாய் போலிருக்கிறது.

ஆனால் புனர் நிர்மாண வேலை அபார வேகத்தில் நடைபெற்று வருகிறது. லெனின் கிராடில் ஏற்பட்டிருந்த அழிவை வார்த்தையால் சொல்ல முடியாது. போட்டோகளும் சினிமா படங்களும் இருந்தால் மட்டுமே அழிவை ஓரளவுக்கு விளக்க முடியும்.

ஆனால் அந்த நகரம் இன்று சமாதான காலத்திய வனப்பையும் கம்பீரத்தையும் பெற்று விளங்குகிறது.

இதைச் செய்த பெருமை ரஷ்ய பெண்களுக்கே! கட்டையான உயரம், கட்டுமஸ்தான திரேகம் வாய்ந்தவர்கள் ரஷ்யப் பெண்கள். லாவகமாகவும், உற்சாகத்துடனும் புத்தி சாதுர்யமாகவும் வேலை செய்கிறார்கள்.

ஆண்களே செய்து வந்த ஆயிரக்கணக்கான வேலைகளை இன்று பெண்கள் செய்கிறார்கள். சுவர் வைக்கிறார்கள்; செமண்ட் பூசுகிறார்கள்; வர்ணம் தீட்டுகிறார்கள். இன்னும் இது போன்ற எண்ணற்ற வேலைகளைச்செய்து முடிக்கிறார்கள்.

இந்த பெண்களில் தாய்மார்கள் அநேகம். குழந்தைகள், வேலை நேரத்தில் குழந்தைகள் வளர்ப்பு சாலைகளுக்குச் செல்கின்றன. குடும்பம் இரவு போஜனத்துக்கு ஒன்று கூடுகிறது.

இவ்வேலையில் ஜெர்மன் கைதிகளை உபயோகிக்க அவர்கள் தயங்கவில்லை. லெனின் கிராட் நகரத்தில் ஜெர்மன் மெகானிக் மோட்டார்களைப் பழுது பார்க்கிறான். இரிவான் பிரதேசத்தில் புது ரஸ்தாவை ஜெர்மானியர் போடுகிறார்கள். ஸ்டாலின்கிராட் நகரை அடுத்த தொழிற்சாலைகளிலும் ரஸ்தாக்களிலும் 50,000 ஜெர்மானியர் வேலை செய்கின்றனர். ஜெர்மானியன் வேலை நிபுணத்துவம் உடையவனாயிருந்தால் தொழிற் சாலையில் உத்தியோக உயர்வும் பெறுகிறான்.

ரஷ்யர்கள் அவர்களை கட்டியணைத்துக் கொள்ளவில்லை. ஆனால் கஷ்டமாக நடத்தவுமில்லை. ரஷ்யர்கள் சுபாவமாகவே பழிக்குப்பழி வாங்கும் குணம் உடையவர்களல்ல.

நிற்க, ரஷ்யாவில் ஏழு மணி வேலை முறை ஆரம்பமாகி விட்டது. சம்பளத்துடன் ஞாயிறு விடுமுறை ஆரம்பமாகிவிட்டது.

* * *

யுத்தத்திலிருந்து ரஷ்ய வாலிபர்கள் திரும்பி வருகிறார்கள். யுத்த முனையிலிருந்து ஏராளமான வாலிபர்களை ஏற்றிவரும் ட்ரெயின்கள் அடுத்தடுத்து வருகின்றன.

மாஸ்கோ வாசிகள் திரும்பி வருகிறார்கள்; ஆர்மீனியர்கள், ஜார்ஜியர்கள் யாவரும் திரும்பி வருவதை நான் கண்டேன்:

அவர்களை ஜனங்கள் வரவேற்பதைக் காணக் கொடுத்து வைக்க வேண்டும். ஆர்மீனியாவின் தலைநகரம் இரிவான். ஒவ்வொரு வீட்டிலுமிருந்து கம்பளத்தைக் கொண்டு வந்து ரயில் ஸ்டேஷனிலிருந்து வரவேற்புக் கூட்டம் நடைபெறும் இடம்வரை தெருக்களில் விரித்து அலங்காரம் செய்து வீரர்களை வரவேற்றனர்.

ஒவ்வொரு வாலிபனுக்கும் ஒவ்வொரு வேலை காத்துக்கொண்டிருக்கிறது. தொழில்களும் வயல்களும் அவர்களை கூவி அழைக்கிறது வேலையில்லை என்ற பேச்சே சோவியத் நாட்டில் நான்கேட்டதில்லை. செய்யவேண்டிய வேலைகள் ஏராளமாக விருக்கின்றன அதைச் செய்ய, விசேஷ திட்டம் தயாராக விருக்கின்றது.

லெனின் கிராட்நகரில் ஓர்தொழிற்சாலை 1942-ம் வருடம் ஏப்ரல் மாதத்தில் சாக்லட் உற்பத்தி செய்து வந்தது. ஜூன் மாதம், அதாவது இரண்டு மாதத்திற்குள் யுத்த தளவாட உற்பத்திசாலையாக மாறிவிட்டது. இன்று, யுத்தம் முடிந்த இரண்டு மாதத்திற்குள் சாக்லட் செய்ய ஆரம்பித்துவிட்டது.

ரஷ்ய கட்டட நிபுணர்களும் கொத்தர்களும் கட்டடம் கட்டுவதில் ஒரே மை கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய திட்டம் காகிதத்துடன் நின்றுவிடவில்லை. திட்டத்தின் மகிமையை தோற்கடிப்பதாய் இருக்கிறது அவர்கள் அதை செய்துமுடிக்கும் வேகமும் திறனும்.

ரஷ்யாவின் திட்டங்களை ரஷ்ய கட்டட நிபுணர்கள் காட்ட நான் பரிசிலனை செய்தேன். லெனின்கிராட் நிபுணர் நீவா நதிக்கரையோரமாக பல சதுர மைல் பரப்பில் தான் போட்டுள்ள அபூர்வ திட்டத்தை எனக்கு விளக்கி விளக்கிக்கூறினார்.

இரிவான் நகர சிற்பி என்னை தன் காரில் ஏற்றிக்கொண்டு தன் புதிய நகரத்தை சுற்றிக் காண்பித்தார். முடிந்த வேலைகளையும் சாதனையையும், முடியவேண்டிய அஸ்திவாரங்களையும் நான் கண்டேன்.

ஒரு படகில் ஏறிக்கொண்டு ஒரு நாள் காலை முழுவதும் வால்கா நதிக்கரையில், வீரம் நிறைந்த வால்கா நதி நகரமாகிய ஸ்டாலின் கிராட் புனர் நிர்மாணத் திட்டத்தை, அந்நகர் நிபுணர் விளக்க புளகாங்கிதமானேன். நதியோரமாக 30 மைல்கள் பரந்து கிடக்கும் அவருடைய, நனவாகப்போகும் கனவைக் கண்டேன். அன்று அந்நதியில் அவருடன் குளித்தேன். மேஜையின்மீது புதிய நகரம் எப்படியிருக்கும் என்று விளக்கும் படத்தைப் பரப்பி எனக்கு எடுத்துச்சொன்னார். உலகத்தில், நதி தீரத்தில் நிற்கும் எந்த நகரமும் இதற்கு நிகராகப் போவதில்லை.

நதியின் கரையில் பெரும் கட்டடங்கள். சரிவில் சிறு கட்டடங்கள் நதிக்கரையை அடுத்த பொதுவிடங்களும், உல்லாசப் பொழுது போக்குக் கட்டடங்களும்; இன்னும் அப்பால் பெரும்பெரும் தொழிற்சாலைகள். தொழிலாளிகளுக்கு வேண்டிய வசதிகள் எல்லாம் என் மனக்கண்முன் எடுத்துக்காட்டினார்.

இதற்கான வேலை ஆரம்பமாகி விட்டது. தயாராகச் செய்து வைக்கப்பட்டிருக்கும் எண்ணற்ற மர வீடுகள் லக்ஷக்கணக்கில் தற்காலிகமாக பிணைக்கப்பட்டு விட்டன.

### ஆர்மினியாவில்

போர்முனைக்கு வெகு தலைவில் ஆர்மினிய இருந்தபோதிலும் யுத்த அபாயம் பரவாத இடமல்ல. இங்கு யுத்த காலத்திலேயும்கூட கட்டடத் திட்டம் ஜரூராக நடந்துவந்தது. அதற்கு காரணம் இல்லாமலில்லை. யுத்த காலத்தில் அகதிகளின் வருகை அதிகரிக்க, உடனே கட்டட வேலையும் ஜரூராக நடைபெற வேண்டியதாயிற்று. ஆர்மினியாவின் தலைநகராகிய இரிவான் 20 வருடத்துக்குமுன்பு இருந்த கேவல நிலைமையென்ன? இன்று அது காட்டும் கம்பீரத் தோற்றமென்ன!

நாற்றமெடுத்த சுகாதாரமற்ற சந்து பொந்துகளும், மண் வீடுகளும், மண் தளங்களும் மறைந்து போயின. அன்றைய ஜனத்தொகை 27,000. ஜார் ஆட்சியில் அங்கு மக்கள் மரணம் விட்டில்பூச்சியின் மரணத்துக்கே ஒப்பிட முடியும்.

இன்றோ! பத்து வருடத்துக்கு முன்பு ஓர் அற்புத நிபுணன் போட்ட திட்டப்படி எழுந்த அழகான நகரம்! போதிய வனப்புடையதல்ல, பழங்காலத்தியது என்று கருதப்பட்டு, வந்த இடத்தில் பன்மடங்கு பெரிய நகரம் எழும்பிவிட்டது. அதன் ஜனத்தொகை இன்று ஐந்து லட்சம். நாகரீகம் நிறைந்த மக்களின் மகிமைக்கு ஏற்ற மாண்புடன் விளங்கும் நகரமாக இன்று இரிவான் திகழ்கிறது. இது நவயுக அற்புதம்.

இயற்கையாகவே ஆர்மீனியர்கள் கலைப்பித்தர்கள். சோவியத் ஆட்சியின் விளைவாக அவர்களது கட்டுண்ட கலை, மடை உடைந்த வெள்ளப் பெருக்கை ஒப்ப கட்டற்று வளர்ந்திருக்கிறது.

ரஷ்யர்கள் எல்லோரைப்போலவும், ஆர்மீனியர்களும் தங்கள் நகரின்மீது பெருமை கொள்ளுகிறார்கள். நான் விமான நிலையத்திலிருந்து நகரில் நுழைவதற்கு முன்பு 'எப்படி எங்கள் நகரம்'' என்று கேட்கிறார்கள்.

"சற்று பொறுங்கள்-நான் பார்த்த பிறகு சொல்கிறேன்'' என்று சொல்லாமல் நான் என்ன சொல்லமுடியும்.

### வர்ணக் கோலம்

இதே வளர்ச்சியும் நிலைமையும் தாஷ்கண்ட் நகரிலும் நான் கண்டேன்.

மரம் நிறைந்த குளிமையான தாஷ்கண்ட் நகரம் சோவியத் நாட்டிலேயே அழகான நகரம் என எனக்கும் படுகிறது. பழக்கவழக்கங்களால் அது முஸ்லிம் நகரம் எனவே சித்திரக் கலையைவிட வர்ணக் கலையே அங்கு அற்புதமாயிருக்கிறது.

தாஷ்கண்டில் சினிமாக் கலை ஓங்கி நிற்கிறது. 12 வருடங்களுக்கு முன்பு சினிமாக் கொட்டகையோ, நாடகமேடையோ இல்லாத ஓர் நகரம்இன்று லண்டன் நகரை மலைக்க வைக்கக்கூடிய அபூர்வ படங்கள் எடுக்கிறார்கள் என்றால் நீங்களே அதன் வளர்ச்சியைக் கண்டு கொள்ளலாம்.

இன்னும் தாஷ்கண்டில் உள்ள நெசவுத் தொழிற்சாலைகள், லங்காஷயர் மில்களுக்கும் அமெரிக்க மில்களுக்கும் சற்றும் பின்வாங்கினதல்ல; அதுமட்டுமன்றி விஞ்ஞான முறையில் பருத்தி உற்பத்தி செய்வதை, உலகம், அந்த மக்களிடமிருந்துபெரும் அளவில் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது.

ஒருநாள் முழுவதும் தாஷ்கண்டில் உள்ள ஆராய்ச்சி நிலையத்தில் கலர் பஞ்சு விளைய வைத்த நிபுணர்களுடன் தங்கியிருந்தேன். விளையும்பொழுதே பச்சை, சாம்பல், பழுப்பு நிறங்களிலும், கம்பளம் போன்ற நயப்புடையதாகவும் பஞ்சு விளைவிப்பதை நான் கண்டேன்.

கம்பளம் போன்று லேசான பச்சை வர்ணத்துடன் இயற்கைப் பஞ்சால் செய்யப்பட்ட வண்டிக் கம்பளங்கள் எவ்வளவு குதூகலமளிக்கிறது.

இந்த சிறிய தேசிய இனம் சோவியத் ஐக்கிய நாட்டில் எப்படி வளர்ந்திருக்கிறது என்பதை எண்ணும் பொழுது எனக்கு வர்ணிக்க முடியாத ஆச்சர்யமும், புளகாங்கிதமும் ஏற்படுகிறது. இதை ஒரு தனிப் புத்தகமாகவே எழுத நினைத்திருக்கிறேன். "சோவியத் ரஷ்யா வயது பெற்றுவிட்டது (Soviet Russia comes of age)'' என்று அப் புத்தகத்திற்கு பெயரிடப்போகிறேன்.

எனது ஆராய்ச்சியை முதலிலிருந்து கடைசிவரை, சோவியத் யூனியன் தனி மனிதனுக்கும் வாழ்க்கைக்கும், இனத்திற்கும், தேசீயங்களுக்கும், என்ன செய்திருக்கிறது என்பதை அடிப்படையாகக் கொண்டே செய்தேன்.

எந்த சமூகத்திலும் அதுவே உயர்ந்த, முடிவான உரைகல்லாக இருக்க வேண்டும். அந்த சமூகம் மக்களின் வாழ்க்கையை வளர்க்கிறதா? ஊக்குவிக்கிறதா? முற்போக்கானதாக்குகிறதா? அன்பை யளித்து அன்பை வளர்க்கிறதா?

ஆர்மீனியா, ஜார்ஜியா, உஸ்பெக்கிஸ்தான் இவற்றைச் சென்று காணும் எவருக்கும் ஆம், ஆம் என்ற பதில் கிடைக்கும். வாஸ்தவம்! அநேக காரியங்கள் இன்னும் செய்ய வேண்டியிருக்கிறது. வெளிச்சத்தில் சில இடங்களில் நிழலும் இருக்கின்றது. ஆனால் ஒளிமயம் மட்டுமே வெற்றியைக் காட்டிவிட்டது.

## இங்கே

# செய்வதற்கு வேலைகள் பல உண்டு ஆனால் "ஆட்கள் வேண்டாம்!"

சோவியத் சோஷலிஸ நாட்டில் சண்டை முடிவதற்கும் புனர் நிர்மாண வேலை ஆரம்பமாவதற்கும் முரண்பாடு ஏற்படவில்லை. சண்டை முடிவதற்கு முன்பே புத்தம் புதிய வீடுகள் கட்டினர். தொழிற்சாலை யமைத்தனர். தொடர்ந்து வாயு வேகத்தில் புனர் நிர்மாணம் தங்கு தடையின்றி நடக்கிறது. தொழிற்சாலைகளும், வயல்களும் வாலிபர்களை வருந்தி அழைக்கிறது என்கிறார் ஹூவ்லட ஜான்ஸன். வேலை எங்கே என்று அந்த இளம் தூதுக்கள் வாடவில்லை. ஆனால் நம் நாட்டிலோ இன்னும் யுத்த வீரர்கள் வீடு திரும்புமுன்பே வேலையில்லாத் திண்டாட்டம் தலைதூக்கிவிட்டது. தொழிற்சாலைகளில், ரயில்வேக்களில் உள்ள எண்ணற்ற தொழிலாளி நாளை என்னவாகுமென்று கதிகலங்குகிறான். வேலையைவிட்டு நீக்கப்படுகிறான், இதற்கு வழியில்லையா? விமோசனமில்லையா?

தமிழ்நாட்டை மட்டும் எடுத்துக்கொள்வோம். புனர் நிர்மாணத் திட்டமென்ன? அதைச் செய்ய போதிய வசதி யெங்கே?

தமிழ்நாட்டில் உடுக்கப் போதுமான உடையில்லை. கல்வியில்லை. சுகாதார வசதியில்லை. குந்தக் குடிசையில்லை. தொழில் வளர்ச்சியில்லை. வேலையுமில்லை.

தமிழ்நாட்டுப் பொதுமக்களே சற்றுச் சிந்தியுங்கள் யாவருக்கும் துணியளிக்க எத்தனை மில் வேண்டும். எத்தனை தேர்ந்த தொழிலாளி வேண்டும். கல்வி புகட்ட எத்தனை பள்ளிக்கூடம் வேண்டும். ஆசிரியர் எத்தனை ஆயிரம் வேண்டும். நகரங்களை, சீர்திருத்த, கிராமத்தை புதிதாக்க எத்தனை என்ஜினியர், கொல்லர், சித்தாள் வேண்டும். நோயற்ற வாழ்வு வேண்டில் எண்ணற்ற டாக்டர்கள் தேவை. எண்ணற்ற ஆஸ்பத்திரிகள் தேவை. சுகாதார இலாகா தேவை. மக்களுக்கு தேவை! தேவை!! தேவைக்கு எல்லையில்லை. வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு அவசியமில்லை. சற்று சிந்தியுங்கள்.

பெரும்மிராசுதார்களின் அபரிமித அனுவசியமான செல்வத்தை, பொதுமக்களின் தேவைக்குப் பயன்படுத்துவோம். பிரதான தொழிற்சாலைகளை அரசாங்க மயமாக்குவோம் உபரி தான்யம் மக்கள் கைக்கு வரும். அதைக்கொண்டு தெருவுக்கொரு பள்ளி நிறுவுவோம் ஊருக்கு ஊர் ஆஸ்பத்திரி கட்டுவோம். குளம் வெட்டுவோம். கால்வாய் வெட்டுவோம். கள்ள மார்க்கெட் என்பதை பழம் புராணமாக்குவோம். இந்த சமூகத்தைக் கட்ட முனைவோம்.

இதில் தலைவர்கள் தவறக்கூடாது. தவறி விடக் கூடாது. நமக்கு வாழ்வுண்டு; தவறினால் நாம் பாழ்பட்டு வீழ்ந்துவிடுவோம். சிந்தியுங்கள்! தீரயோசியுங்கள்! சோவியத் நாட்டில் முடிந்தது நம் நாட்டில் ஏன் முடியாது என்று மீண்டும் மீண்டும் கேட்டுக்கொள்ளுங்கள்! பிறரைக் கேளுங்கள்.

சுதந்திர தமிழ்நாட்டில் யாவருக்கும் வேலையுண்டு. ஊர்விட்டு, வாசல் விட்டு, நாடெல்லாம் 40 ரூபாய் சம்பளத்துக்கு நடக்க வேண்டாம் பம்பாய் எங்கே, கல்கத்தா எங்கே, டெல்லி எங்கே என்று நாலணா காசுக்கு நாம் பரதவிக்க வேண்டாம். தொழிற்சாலையும், வயல்களும் நம் தமிழ்நாட்டு மக்களை மட்டுமன்றி, ஆந்திர நாட்டு மக்களையும், அயல்நாட்டு மக்களையும் அழைக்கும். அந்த அழகிய வளர்ச்சியில் மட்டுமே எல்லா தேசிய இன மக்களும் சினேகபாவத்துடன் சகோதரராய்கூடி ஐக்கிய இந்தியாவில் நிற்கமுடியும்.

(5-ம் பக்க தொடர்ச்சி)

சுதந்திர இந்தியாவில் சுதந்திரத் தமிழ்நாட்டை அமைப்போம். அந்நியர் பூமிக்கு வேலை தேடி யாரும் ஓடவேண்டியதில்லை. எல்லோருக்கும் நாமே வேலை கொடுப்போம். அந்நியர் வந்து இங்கு சுரண்ட வேண்டியதில்லை. நம் இனத்தினரிலேயே மிக மிகப் பிற்போக்கில் ஆழ்ந்து கிடக்கும் மக்களுக்கு கை கொடுத்து தூக்கிவிடும். தாய்மொழியில் சகல கலைகளையும் கற்போம். பாஷை யிருந்தும் எழுத்தில்லாத் தோம்பர்கள் போன்ற நம் மக்களுக்கு எழுத்து அமைத்துக்கொடுப்போம். எழுத்திருந்தும் பள்ளிக்கூடங்கள் இல்லாத நம் சௌராஷ்டிர சகோதரர்களுக்கு அவர்கள் பாஷையிலேயே பள்ளிக்கூடங்களை ஏற்படுத்துவோம்.

கல்வி யில்லை என்று எந்த சமூகமும் கவலைப்பட வேண்டியதில்லை. தாழ்த்தப்பட்ட மக்களிடையே யிருந்து ஸி. வி. ராமன்கள் தோன்றுவதற்கு வழி செய்வோம்!

மற்றவர்களுடன் ஒன்று சேர்வோம்; சம அந்தஸ்தில்!

இதற்கெல்லாம் ஒரே வழி சுய நிர்ணய உரிமை! நமக்குமட்டுமல்ல; மற்ற எல்லோருக்கும்; வடகிழக்கிலும் மேற்கிலுமுள்ள முஸ்லிம்களுக்கும்!

நாம் நம் நாட்டை சுதந்திர தமிழர் குடியரசு என்று அழைப்போம். அவர்கள் தங்கள் நாட்டை சுதந்திர பாக்கிஸ்தான் என்றழைக்கட்டும்!

தங்களை ஒருகாலத்தில் ஒடுக்கிய ரஷ்யர்களுக்கு எதிராக உஸ்பெக்க முஸ்லிம்கள் எப்படி இன்று நடந்து கொள்ளவில்லையோ, அதேபோல் நமக்கு எதிராக காஷ்மீர் முஸ்லிம்கள் ஒருபோதும் நடக்கமாட்டார்கள்! அஜர்பைஜான் முஸ்லிம்களும், உக்ரேனிய கிருஸ்தவர்களும் எப்படி இன்று சண்டையிட்டுக் கொள்ளவில்லையோ, அதைப்போலவே மேற்கு வங்காள ஹிந்துக்களோடு கிழக்குவங்காள முஸ்லிம்கள் நிச்சயம் சண்டைக்கு வரமாட்டார்கள்.

உணர்ச்சி அடக்கப்பட்டால்தான் சண்டை! சுதந்திரம் மறுக்கப்பட்டால்தான் போர்! நாம் சுதந்திரத்தைக் கோருகிறோம்; யார் சுதந்திரத்தையும் மறுக்கமாட்டோம். எல்லோருக்கும் சுயநிர்ணய உரிமையை–சுதந்திரத்தை–கொடுப்போம்! அதனால் திரளும் ஒற்றுமை சக்தியைக்கொண்டு ஏகாதிபத்தியத்தை வேரோடு வெட்டி வீழ்த்துவோம்! அந்த இடத்தில் சுதந்திரக் குடியரசுகள் வளர்ந்து தளிர்விட்டு பூக்கட்டும்!

# கல்வி வசதியைப் பெருக்குக!

## திருச்சி மாணவர் கிளர்ச்சி

திருச்சி மாணவர் சங்கத்தின் மூன்றாவது மகாநாடு அக்டோபர் மாதம் 28-ந்தேதி கிரிஸ்டியன் கல்லூரி பேராசிரியர் ஜகத்பதி தலைமையில் கூடியது. அகில இந்திய மாணவர் சம்மேளனத்தின் கூட்டுக் காரியதரிசி தோழர் பரமேஸ்வரன் மகாநாட்டைத் திறந்து வைத்தார். தமிழ்நாட்டு மாணவர் சம்மேளனத்தின் காரியதர்சி தோழர் மாணிக்கம் கொடியேற்றுவித்தார். 400 அங்கத்தினர்களின் சார்பாக சுமார் 75 பிரதிநிதிகளும், 200 பார்வையாளர்களும் கூடி சங்கத்தின் வேலைத் திட்டத்தை தீர்க்கமாக விவாதித்து வகுத்தனர்.

"படிக்கிறோம், வசதி கொடு" என்ற கோஷத்தை இந்த வருஷ ஆரம்பத்தில் தமிழ்நாடெங்கும் கேட்டோம்.

திருச்சி இதற்கு விதிவிலக்கல்ல. நூற்றுக்கணக்கான மாணவர்கள் கல்வி கற்க சந்தர்ப்பமில்லாது வீடு திரும்ப வேண்டியதாயிற்று. "யுத்த காலம்" என்று சொல்லி தன் பொறுப்பைத் தட்டிக் கழித்தது அரசாங்கம்.

இன்று யுத்தம் முடிந்துவிட்டது. அடுத்த வருஷமும் அதே பிளேட்டை திருப்பி வைக்கக்கூடாதென்று மாணவர் சம்மேளனம் எச்சரிக்கிறது. "கல்வி வசதிகளைப் பெருக்கவேண்டும்" என்று கோஷிக்கிறது. ஷிப்டு முறையை தற்காலிக ஏற்பாடாக அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று வற்புறுத்துகிறது.

தொழில் வளர்ச்சியில் திருச்சிக்கு முக்கிய ஸ்தானம் உண்டு. ஆனால் திருச்சியில் இதுவரை ஒரு தொழிற் கல்லூரிகூட இல்லை. ஒரு தொழில் கல்லூரி ஏற்படுத்தவேண்டுமென்பது அதன் கோரிக்கை.

படிக்க இடம் கிடைத்தாலும் இருக்க இடம் கிடைக்கவில்லையென்று பரிதவித்த மாணவர் பலர்; இன்னும் பரிதவிக்கின்றனர். அடுத்த வருஷத்துக்காகிலும் புதிய ஹாஸ்டல்கள் வேண்டும்.

* * *

### பிரஜா உரிமைகள்

கல்லூரி, பள்ளிக்கூடங்களில் உள்ள நிலையோ சொல்லத் தரமன்று.

செயிண்ட் ஜோஸப் கல்லூரி தமிழ் நாட்டின் மிகப் பெரிய காலேஜ். சுமார் 2000 மாணவர்கள் படிக்கிறார்கள், ஆனால் ஜனநாயக உரிமை யென்பதின் வாசனை கூட கிடையாது. காலேஜுக்கு ஒரு யூனியன் இருக்கிறது. யூனியனில் மாணவர்கள் தங்களுக்குப் பிடித்தமான விஷயங்களைக் குறித்து விவாதிக்க முடியாது. உதாரணமாக, காங்கிரஸ்-லீக், காங்கிரஸ்-கம்யூனிஸ்ட் பிரச்னைகள், காங்கிரஸ், லீக், கம்யூனிஸ்ட் கட்சிகளின் தேர்தல் திட்டங்கள், கல்வித் திட்டங்கள், பொருளாதாரத் திட்டங்கள் முதலியவற்றைக்குறித்து மாணவர்கள் விவாதித்து, விஷயங்களை கிரஹித்துக் கொள்ள வேண்டாமா? ஆனால் அதிகாரிகள் அனுமதி இதற்கெல்லாம் கிடைக்காது.

ஹாஸ்டலில், சாப்பாட்டு விடுதிக்கு ஒரு மாணவர் பிரதிநிதி இருக்கிறார். ஆனால் சாப்பாட்டைப்பற்றியோ, கரிகாய்களைப் பற்றியோ, யோசனை கூறக்கூட அவருக்கு உரிமை கிடையாது! கணக்குப் பிள்ளை உத்தியோகம் செய்வது தான் அவர் பணி!

### நீதி நெறி!

"நீதி நெறி வகுப்பு" ஒன்று நடத்தப்படுகிறது. சென்னை சர்வ கலாசாலை விதிகளின்படி இது கட்டாய படிப்பு அல்ல. ஆனால் கல்லூரி அதிகாரிகள் கட்டாயப் படிப்பாக்கியிருக்கிறார்கள். அவர்களுடைய நீதி நெறி உபந்நியாசம் என்ன தெரியுமா?" கம்யூனிஸத்தை தூஷித்து பிரசாரம் செய்வதுதான். மாணவர்களுக்கு தத்தம் மதக்கோட்பாடுகளைப் பற்றி விளக்கிச் சொல்ல உரிமை இல்லை. "நமது கல்லூரிக்குள் கத்தோலிக்க சமயத்தை தவிர இதர மத வழிபாடுகள் கூடாது" என்கிறாராம் அதன் ஆசிரியர்!

### ஜாதிமத பேதம்

இதற்குமேல் ஜாதி மத உயர்வு தாழ்வு மனப்பான்மைக்கு ஊக்கமளிக்கப்படுகிறது. க்ளவ் ஹாஸ்டலில் பிராம்மணருக்கும், பிராம்மணரல்லாதாருக்கும் தனித்தனி சாப்பாட்டுப் பந்தி! இதை எல்லா மாணவர்களும் எதிர்த்தாலும் கூட, கல்லூரி அதிகாரிகள் அசைவதாயில்லை. மாணவர்களை பிரித்தாளும் பிற்போக்கான சூழ்ச்சி இது.

### தேசீயம்!

திருச்சியிலுள்ள இன்னொரு கல்லூரிக்கு தேசீய கல்லூரி என்று பெயர். பெயர்தான் தேசீய கல்லூரி. கல்லூரியின் ஹாஸ்டலில் ஹரிஜன மாணவர்களுக்கும் முஸ்லிம் மாணவர்களுக்கும் தங்கவோ, விருந்தாளியாக சாபபிடவோ முடியாது. கல்லூரி பிரின்ஸ்பாலின் போக்கு வகுப்பு துவேஷத்துக்கு தூபம் போடுவதாயிருக்கிறது.

கல்லூரிகளிலேயே இந்த நிலைமையென்றால், பள்ளிகளில் கேட்க வேண்டுமா? பிஷப்ஹீபர், ஸ்ரீரங்கம் உயர்தர பளளகளில் கூட்டு விவாதங்கள் நடத்தும் அடிப்படையான பிரஜா உரிமைகூட இல்லை. வாசகசாலைகள் கிடையாது.

இக்குறைகளை யெல்லாம் மாணவர்கள் விவாதித்தனர். பிரஜா உரிமைகளைப் பெறவும், ஜாதிமத பேத சூழ்ச்சிகளை முறியடிக்கவும் விரதம் பூண்டனர். திருச்சி மாணவர்களின் திரண்டபலத்தால், பொது மக்களின் பக்கபலத்துடன், தங்கள் கோரிக்கைகளைப் பெறுவோமென்று கர்ஜித்தார்கள். ஜனநாயக உணர்வு சுடர்விட்டுப் பிரகாசிக்கும் அவர்கள் வதனங்களில் புது நம்பிக்கை ஒளி வீசுவதைக் கண்டேன். புதிய தமிழ் நாட்டின் சிற்பிகளல்லவா இவர்கள்?

மாணவர் சம்மேளனத்தின் அரசியல் கொள்கையையும் விவாதித்தார்கள். அகில இந்திய மாணவர் சம்மேளனத்தின் காரியக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தை ஏகமனதாக நிறைவேற்றினார்கள்.

### பொதுக்கூட்டம்

மாலை ரஸிக ரஞ்சன சபாவில் பொதுக்கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆனால் கடைசி நிமிஷத்தில், சபாவுக்கு அனுமதியளித்தவர்களே, சபாவை பூட்டிக்கொண்டுபோய் விட்டார்கள். இதன் பொறுப்பு காங்கிரஸ் தேர்தல் பிரசாரக் கமிட்டி அங்கத்தினர் ஸ்ரீ மணி அய்யருடையது. இவ்விதமாக தடைகள் போட்டு, மாணவர்களின் பிரஜா உரிமையைப் பறிப்பதுதான் இவர்கள் செய்யும் காங்கிரஸ் சேவை போலும்!

ஆனால், இந்த சூழ்ச்சியைச் செய்தவர்கள் ஒரு விஷயத்தை மறந்துவிட்டார்கள். திருச்சி மாணவர் சங்கத்தினர் புதுயுக வீரர்களென்பதை மறந்தனர்.

சபாவின் வாசலிலேயே 500 மாணவர்களும் அமர்ந்து பொதுக்கூட்டத்தை நடத்தினர்கள். தோழர் எஸ். ராமகிருஷ்ணன் மாணவர் சங்க மகாநாட்டின தீர்மானங்களை விளக்கிப் பேசினர். அரசியல் கட்சிப் பூசல்களால் மாணவர் இயக்கம் சிந்திச் சிதறிப் போகாமல் சகல பகுதிகளையும் ஒன்றுபடுத்தி மாணவர் உரிமைகளுக்காக போராடி தேசத்துக்கே முன்மாதிரியாய் திகழக்கூடிய மாணவ ஜனநாயகத்தை சிருஷ்டிக்கும்படி கேட்டுக் கொண்டார்.

திருச்சி மாணவர் சங்கம் போர்க்கொடியை உயர்த்திவிட்டது. அறிவுக் கோயில்களாக விளங்கவேண்டிய கல்லூரிகளிலிருந்து ஜாதி மத பேத முறைகளை ஒழித்துக் கட்டி, பிரஜா உரிமைகளை நிலைநாட்டுவார்களென்பது உறுதி. சகல தேசபக்த மாணவர்களும் மாணவர் ஸ்தாபனங்களும் குழுக்களும் திருச்சி மாணவர் சங்கத்துடன் சேர்ந்து நிற்பார்களாக!

(10-ம் பக்க தொடர்ச்சி)

லின் பெயரால் சீர்குலைக்க முயற்சித்தனர் சில சுயநலமிகள். அந்தக் கலகக் காரர்களின் சதியை முறியடித்தது இந்தத் தீர்மானம்.

### இரண்டு வகையில் போர்

தொழிலாள வர்க்கத்திற்கு இரண்டு வகையில் தாக்குதல் ஏற்பட்டிருக்கிறது. ஒன்று வேலையில்லாத் திண்டாட்டத்தை சிருஷ்டி செய்து தொழிலாள வர்க்கத்தின் நிகழ் காலம், எதிர் காலம் பூராவையும் சீர்குலைக்க அதிகார வர்க்கம் முயற்சிக்கிறது. மற்றொன்று, அரசியல் கட்சிகளுக் கிடையேயுள்ள வித்தியாசங்களைப் பயன்படுத்திக் கொண்டு, 'தேசபக்தி'யின் பெயரால் சில கட்சி வெறியர்கள் தொழிற் சங்கங்களைத் தாக்குகின்றனர். கட்சி துவேஷங்கள் நேர்மையான அரசியல் வாதிகளின் கண்களை மறைக்கின்றன. தங்களுடைய நடவடிக்கைகளினால் தொழிலாளர்களிடையே பிளவு ஏற்பட்டாள், அதிகார வர்க்கத்திற்குதான் அனுகூலமென்பதைக்கூட உணர மறுக்கின்றனர்.

இந்த இரண்டுவித ஆபத்திலிருந்தும் காப்பாற்றிக்கொள்ள முடியுமென்று தென்னிந்திய ரயில்வேத் தொழிற் சங்கம் தொழிலாள வர்க்கம் பூராவிற்கும் வழிகாட்டியுள்ளன.

### போர்க்கொடி உயர்ந்தது!

அதிகார வர்க்கத்தின் தாக்குதலை எதிர்த்து போர்க் கொடி உயர்த்திவிட்டது. அரசியல் வாதிகளின் சீர்குலைவை எதிர்த்து—ஒற்றுமை—ஜனநாயகம்—ஆகிய இரண்டு அம்சங்களையும் தன் கொடியில் பொறித்துள்ளது. தொழிலாளவர்க்கத்திற்கு அரசியல் போதிப்பதாக நினைக்கும் சில அரசியல் வாதிகளின் மமதையை மண்டையிலடித்து, தொழிலாள வர்க்கத்தினிடமிருந்துதான் அரசியல் பாடங்கள் கற்றுக்கொள்ள வேண்டுமென்று தெளிவாக்கி விட்டது. உலகம் போற்றும் பெருமை வாய்ந்த சங்கமல்லவா தென்னிந்திய ரயில்வேத் தொழிற் சங்கம்! இதை மீண்டும் நிரூபித்துவிட்டன, தஞ்சையில் செய்துள்ள முடிவுகள்.

# சென்னை ஹைஸ்கூலில் ஸ்ட்ரைக்

சென்னை ராயப்பேட்டையிலுள்ள வெஸ்லி உயர்தரப் பள்ளியில் வெள்ளிக்கிழமை முதல், திங்கள் பகல் வரை மாணவர் சுமார் 200 பேர் வேலை நிறுத்தம் செய்தனர். இதற்குப் பொறுப்பாளி யார்?

5 வதுபாரம் B வகுப்பில் இரண்டு மாணவர்கள் ஏதோ வீட்டு வேலை நிமித்தம் பள்ளிக்குச் செல்லவில்லை. அவ்விருவரும் நல்ல கால்பந்து விளையாட்டுக் காரர்கள். அன்று மாலை நடந்த பந்தயத்தில் பங்கெடுத்துக் கொள்ள விளையாட்டு மைதானத்திற்குச் சென்றனர். ஒரு உபாத்தியாயர் அவர்களை ஹெட்மாஸ்டர் முன் இழுத்துச்சென்று நிறுத்தினர்.

ஹெட்மாஸ்டர் விசாரணை எதுவுமின்றி, தன் கை வரிசையைக் காட்டினர் பிரம்புகொண்டு தண்டனை கொடுத்தார். இந்த அநியாயமான தண்டனையை கேள்வி முறையின்றி உபயோகித்ததை மாணவர்கள் கண்டு வெறுப்படைந்ததில் ஆச்சர்யமில்லை. விளையாட்டில் சிறந்த தங்கள் தோழர்களுக்கு அளித்த தண்டனை கேவலமானது என நினைத்து 5 வது பாரம் B வகுப்பு மாணவர்கள் ஒரு நாள் வேலை நிறுத்தம் செய்தனர் அவர்களுடன் சேர்ந்து வகுப்பிலும், மேல் வகுப்பு மாணவர்களிடம் மிகுந்த செல்வாக்கு பெற்றிருந்த வகுப்பு மானீட்டரும் ஸ்டிரைக் செய்தார். பிற மாணவர்களை எதிர்த்து தான் மட்டும் பள்ளிக்குச்செல்வது நியாயமல்ல வென்று அவர் நினைத்தது சரி.

ஆனால் ஹெட்மாஸ்டர் மூளைக்கு அது சரியெனத் தோன்றவில்லை போலும். ஆத்திரம் கொண்டு அநீதியான முறையில் மானீட்டரை மட்டும் வகுப்பிலிருந்து ஸஸ்பெண்ட் செய்தார். அது என்ன நீதியோ! அவரைத்தான் கேட்கவேண்டும்.

இது மேல்வகுப்பு மாணவர்களின் கோபத்தையும் தூண்டி விட்டது. சனிக்கிழமை 200 க்கு மேற்பட்ட மேல்வகுப்பு மாணவர்களும் பள்ளி செல்ல வில்லை. திங்கள் கிழமை முடிய ஸ்ட்ரைக் செய்தனர். பள்ளிப் படிப்பை வீணுக்கக் கூடாதென கூடி முடிவுசெய்து திங்கள் மாலை மீண்டும் வகுப்புக்குச் சென்றனர்.

மாணவர்களின் தீர்க்கபுத்தி ஹெட் மாஸ்டருக்கு இல்லாதது கண்டு வருந்துகிறோம். இன்னும் ஸஸ்பெண்ட் ஆர்டரை வாபஸ் வாங்க மறுப்பதன்னியில் டிஸ்மிஸ் செய்யப்போகிறேன் என்றும் மிரட்டுகிறாராம் குதிரைக் கீழ் தள்ளினது மட்டுமன்றி குழியையும் பறித்தது போலிருக்கிறது ஹெட்மாஸ்டர் போக்கு.

இன்னும் நூதன முறைகளையும் அவர் அனுஷ்டிக்கிறார். போலீஸ் படையையும், ஸி. ஐ. டி. கும்பலையும் பள்ளியில் அனுமதித்திருக்கிறார். இதனால் மாணவர்களைமிரட்டி உருட்டி தன் பிடிவாதத்தை நிறைவேற்ற எண்ணம்போலும். இந்த வரட்டு ஜம்பம் காரியத்துக்குதவாது.

இதை எதிர்த்து சென்னை மாணவர் சங்கம் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. பெற்றோர்களும்பொது மக்களும் இதை விசாரித்து யார் மீது தப்பு என்று முடிவுசெய்து அந்த மாணவரின்மீது விதிக்கப்பட்டிருக்கும் அநியாய சஸ்பெண்ட் உத்திரவை வாபஸ் பெறச் செய்ய வேண்டும்.

ஹெட்மாஸ்டரும் அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிக்கும் மடமையைவிட்டு, மாணவரை உடனே பள்ளியில் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று நாம் வற்புறுத்துகிறோம்.

# தேர்தலின்போது மாணவர் சம்மேளனம் என்ன செய்யும்?

இம்மாத இரண்டாவது வாரத்தில் அகில இந்திய மாணவர் சம்மேளனத்தின் காரியக் கமிட்டி பம்பாய் நகரில் கூடியது. வரப்போகும் தேர்தல்களைக் குறித்து, மாணவர் சம்மேளனம் அனுஷ்டிக்க வேண்டிய கொள்கையை காரியக்கமிட்டி தீர்க்கமாக விவாதித்து திட்டமிட்டது.

மாணவர்களின் பொதுஸ்தாபனம் மாணவர் சம்மேளனம். கல்லூரிகளிலும், ஹாஸ்டல்களிலும் மாணவர் வாழ்க்கையை மேம்படுத்தவும், மாணவர் குறைகளைத் தீர்க்கவும், மாணவர் உரிமைகளை பாதுகாக்கவும், மாணவர்கள் நடத்திய போராட்டங்களில் பிறந்து வளர்ந்த ஸ்தாபனம் அது.

இன்று தேசத்தில் காங்கிரஸ்-லீக் சண்டையும், காங்கிரஸின் கம்யூனிஸ்டு எதிர்ப்பும் முற்றுவதால், அரசியல் உலகத்தில் தேசபக்தர்களிடையே பரஸ்பர விரோதமும் மனக் கசப்பும் விஷம்போல் ஏறி வருகிறது. இது மாணவர் உலகத்தையும் மோதி, மாணவர்களையும் காங்கிரஸ், லீக், கம்யூனிஸ்டு என்று பிரிக்கப் பார்க்கிறது.

பெரும்பான்மையான காங்கிரஸ் தலைவர்கள் ஆதரவில் தோன்றியிருக்கும் மாணவர் காங்கிரஸ் கம்யூனிஸ்டு எதிர்ப்பு, லீக் எதிர்ப்பு கோஷங்களிட்டுக்கொண்டு 'காங்கிரஸ் பிரசாரம்' செய்கிறது.

முஸ்லிம் மாணவர் சம்மேளனம் காங்கிரஸ் எதிர்ப்பு பிரசாரத்தில் மேலும் மேலும் இறங்குகிறது. லீகுக்கு ஆதரவு திரட்டுகிறது.

இவ்விதமாக மாணவர்கள் கட்சி கட்சியாக பிரிந்து நின்று சண்டை போட்டால், அப்புறம் மாணவர் இயக்கம் ஏது? மாணவர்களின் கோரிக்கைகளைப்பெற ஒன்றுபட்ட மாணவர் இயக்கம் வேண்டாமா?

இன்று மாணவர்களுக்குள் அரசியலில் அபிப்பிராயபேதங்கள் இருக்கலாம். ஆனால் அதே சமயத்தில், மாணவர்கள் உரிமைகளை பாதுகாக்க, குறைகளை நிவர்த்திக்க, அவர்கள் ஒன்றுபட வேண்டும். ஒன்றுபட முடியும்.

### ஜனநாயக முறையில் விவாதம்

இம்முறையில், மாணவர் சம்மேளனம் ஒன்றுபட்ட மாணவர் இயக்கத்தின் வடிவமாக திகழும்.

அரசியல் வித்தியாசங்களை விவாதிக்க வேண்டாமென்று சம்மேளனம் தடை செய்யவில்லை. அதற்கு மாறாக, மாணவர்கள் காங்கிரஸ்-லீக், காங்கிரஸ்-கம்யூனிஸ்ட் பிரச்னைகளை ஜனநாயக ரீதியில் விவாதிக்க வேண்டுமென்று சம்மேளனம் கூறுகிறது. சம்மேளனத்தின் மேடையில் காங்கிரஸ் தலைவரும், லீக் தலைவரும், கம்யூனிஸ்ட் தலைவரும் தத்தம் கட்சியின் திட்டத்தை விளக்க உரிமையுண்டு. கம்யூனிஸ்ட் திட்டத்தை பிரசாரம் செய்ய கம்யூனிஸ்ட் மாணவர்களுக்குள்ள உரிமையையும், லீக் திட்டத்தை பிரசாரம் செய்ய முஸ்லிம் மாணவர்களின் உரிமையையும், தேசிய முஸ்லிம்களின் திட்டத்தை பிரசாரம் செய்ய தேசிய முஸ்லிம் மாணவர்களின் உரிமையையும், காங்கிரஸ் திட்டத்தை பிரசாரம் செய்ய காங்கிரஸ் மாணவர்களின் உரிமையையும் சம்மேளனம் பாதுகாக்கும். மாணவர்களின் லட்சிய ஆர்வத்தில், நியாய நெறியில், சம்மேளனத்துக்கு பரிபூர்ண நம்பிக்கை உண்டு. மாணவ ஜனநாயகத்தை காப்பாற்ற சம்மேளனம் பாடுபடும்.

### தேர்தல் கொள்கை

மாணவர் சம்மேளனத்தில் பலதரப்பட்ட அபிப்பிராயங்களை உடையவர்கள் இருக்கிறார்கள். கம்யூனிஸ்டுகள், தேசிய முஸ்லிம்கள், காங்கிரஸ் வாதிகள், எக்கட்சியிலும் சேராத தேசபக்தர்கள்—, இருக்கிறார்கள். மாணவர் சம்மேளன அங்கத்தினர்கள், காங்கிரஸ்-லீக் ஐக்கியத்துக்காக பாடுபட்டு வந்திருக்கின்றனர். அவர்களுக்குள் அரசியல் அபிப்பிராயபேதங்கள் இருந்தபோதிலும், காங்கிரஸ் எதிர்ப்போ. லீக் எதிர்ப்போ, கம்யூனிஸ்ட் எதிர்ப்போ அவர்களிடம் கிடையாது.

தேர்தலில் மாணவர் சம்மேளன அங்கத்தினர்கள் அவரவர் இஷ்டப்பட்ட கட்சியையோ, அபேட்சகரையோ ஆதரிக்கலாம். மாணவர் சம்மேளனம் ஸ்தாபனரீதியாக ஒரு கட்சியை ஆதரித்து இன்னொரு கட்சியை எதிர்க்காது. ஏனென்றால் காங்கிரஸ்-லீக்-கம்யூனிஸ்ட் கட்சிகள் ஒன்றையொன்று புரிந்து கொண்டு, ஒன்றுசேர வேண்டுமென்பதே அதன் கோரிக்கை.

காங்கிரஸ், லீக், கம்யூனிஸ்ட் கட்சிகளுக்குள் அரசியல் அபிப்பிராயபேதங்கள் பல இருந்தபோதிலும், அவர்கள் எல்லோரிடமும் மாணவர் கோரிக்கைகள் சம்பந்தப்பட்டவரை உடன்பாடிருக்குமென்று சம்மேளனம் நம்புகிறது.

### எதிர்காலத்திற்கு திட்டம்

உடனடியாக, கல்வி முறையில் பல சீர்திருத்தங்கள், அபிவிருத்திகள், புதிய வசதிகள் வேண்டும். மாணவர் உரிமைகள் பல ஊர்ஜிதமாக வேண்டும்; குறைகள் பல நீங்கவேண்டும். பாஸ் பண்ணி வெளியில் போனல் வாழ்க்கையில் சோர்வு உண்டுபண்ணக்கூடிய வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிய வேண்டும்.

சுதந்திர இந்தியாவில் மாணவர்களுடைய அந்தஸ்து என்ன? அவர்கள் உரிமைகள், பொறுப்புகள் என்னென்ன?

இவைகளையெல்லாம் குறித்து மாணவர் சம்மேளனம் ஒரு திட்டம் வகுக்கும். இந்தத் திட்டத்தை தங்கள் தேர்தல் பிரகடனத்தில் இணைத்துக்கொள்ளுமாறு காங்கிரஸ், லீக், கம்யூனிஸ்ட் கட்சிகளைக் கோரும். இத்திட்டத்தை இந்திய மாணவர்களிடையே விவாதித்து, மாணவர்களிடையே உரிமையுணர்ச்சியும் பொறுப்புணர்ச்சியும் பூக்கச் செய்யும்.

அந்தப் பிரகடனத்தின் அடிப்படையில், ஒவ்வொரு கல்லூரி, பள்ளிக்கூடத்திலுமுள்ள குறைகளையும், செய்யவேண்டிய அபிவிருத்திகளையும் ஆராய்ந்து, திட்டம் வகுத்து அவைகள் நிறைவேறக் கிளர்ச்சி செய்யும்.

# "வேலை நிறுத்த ஓட்டு" எடுக்க முடிவு

## ★ போருக்கிழுக்கிறது ரயில்வே போர்டு
## ★ தேர்தல்பற்றி கொள்கை விளக்கம்

*இந்தமாதம் 27, 28 தேதிகளில் தஞ்சையில் கூடிய தென்னிந்திய ரயில்வேத் தொழிற் சங்கத்தின் மத்தியக்கமிட்டி இரண்டு முக்கியமான தீர்மானங்கள் நிறைவேற்றியுள்ளது. அதில் ஒன்று "வேலை நிறுத்த ஓட்" எடுப்பது. டெம்பரரி தொழிலாளர் அனைவருக்கும் வேலை கொடுக்க வேண்டும். எல்லோருக்கும் சம்பள விகிதத்தை வாழ்க்கை தேவைக்குத் தக்கவாறு உயர்த்த வேண்டும் ரயில்வே போர்டு இந்த இரண்டு பிரச்னைகளை குறித்தும் நியாயமான பதிலை உடனே கொடுக்காவிட்டால் வேலை நிறுத்த ஓட் எடுப்பது என்று முடிவு செய்துளளது. அடுத்த தீர்மானம் தேர்தல் சம்பந்தமானது. "எல்லா அரசிய கட்சியினரும் ஜனநாயக அடிப்படையில தொழிற் சங்கத்தில் உழைக்கவும், அவரவர்கள் அரசியல் கொள்கைக்கேற்ப யாருக்கு வேண்டுமானாலும் ஓட் அளிக்கவும் உரிமையுண்டு" என்று தீர்மானித்துள்ளது.*

அக்டோபர் 27, 28 தேதிகளில் தஞ்சை ராஜா சத்திரத்தில் தென்னிந்திய ரயில்வேயிலுள்ள 40 ஆயிரம் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் கூடினர். 34 கிளைச் சங்கங்களிலிருந்தும் சுமார் 300 பத்திய சங்க அங்கத்தினர்களும், பார்வையாளர்களும் வந்திருந்தனர். ஒரு மகாநாடு போன்றிருந்தது நடவடிக்கைகள். ரயில்வேயில் என்னென்ன பிரிவுகள் உண்டோ அத்தனை பிரிவுகளிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தனர். காங்கி தொழிலாளி குமாஸ்தா, ஸ்டேஷன் மாஸ்டர், பாயிண்ட்ஸ் மென், டிரைவர், பயர் மென் இன்னும் எல்லா டிபார்ட்டுமெண்டுகளிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தனர்.

### நிர்வாகத்தின் தாக்குதல்

இந்த மத்திய சங்கக் கூட்டம் தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர் சரித்திரத்தில் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. யுத்தம் முடிந்ததும் ரயில்வே போர்டு ஒருபுறத்தில் ரயில்வேத் தொழிலாளர்களைத் தாக்க ஆரம்பித்திருக்கிறது. சண்டை முடிந்ததும் சம்பளம் உயரும், வீட்டு வசதி கிடைக்கும், இன்னும் புது வாழ்வு உண்டாகும் என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்த ரயில்வேத் தொழிலாளியை வயிற்றிலடிக்க ஆரம்பித்திருக்கிறது ரயில்வே போர்டின் ஆள் குறைப்புத் திட்டம். வேலையினின்று நீக்க வேண்டியது 2½ லட்சம் பேர் இராது, அதைவிடக் குறைவானது என்று போக்குவரத்து மெம்பர் சர் எட்வர்ட் பெந்தால் கூறுவது வியப்பாக இருக்கிறது. ஒருவரையும் வேலையினின்று நீக்கக்கூடாது என்பது ரயில்வேத் தொழிலாளரின் கோரிக்கை. இப்பொழுதிருக்கும் டெம்பரரி தொழிலாளரனைவரையும் பயன்படுத்தி ரயில்வேக்களை அபிவிருத்தி செய்யவேண்டியது அவசியம். மக்களுக்கு அவசியமான உணவுப் பொருள்கள், துணி முதலியவற்றை எடுத்துச் செல்லத் தேவையான வாகன்கள் கிடையாது. மூன்றும் வகுப்புப் பிரயாணிகள் படும் அவஸ்தை சொல்ல முடியாது. எல்லா வண்டிகளும் மராமத்துப் பார்த்து பல வருடங்கள் ஆகிவிட்டதால், ஒழுக ஆரம்பித்துவிட்டன. இடம் கிடைப்பதே கஷ்டம். இடம் கிடைத்து விட்டாலும், வண்டிகள் ஒழுகுவதால், மழையில் நனைந்துகொண்டே பிரயாணம் செய்யும் அவதியை வர்ணிக்க முடியாது. இந்த வண்டிகளை துரிதமாகப் பழுதுபார்த்து அனுப்பத் திட்டமிட்டாலே, இன்னும் பல ஆயிரக்கணக்கான தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்க முடியும். ஆனால் இன்று பொன்மலை ஒர்க்ஷாப்பில் மட்டும் இது வரை 1059 தொழிலாளர்கள் ஆள் குறைப்புத் திட்டத்திற்கு பலியாகி இருக்கின்றனர். பொதுமக்கள், ரயில்வேத் தொழிலாளி ஆகிய இருவரையும் ஏககாலத்தில் தாக்குகின்றது ரயில்வே நிர்வாகம். ரயில்வே அபிவிருத்தித் திட்டமில்லாததால் ரயில்வே தொழிலாளருக்கு வேலையில்லாத் திண்டாட்டத்தை சிருஷ்டிக்கிறது. போதிய ரயில் வசதி ஏற்படுத்தாததால் பொது மக்களுக்குப் பஞ்சத்தையும் பட்டினியையும் சிருஷ்டிக்கிறது. இவ்வாறு ஏககாலத்தில் பொது மக்களுக்கும், ரயில்வேத் தொழிலாளர்களுக்கும் விரோதமாக சதி செய்யும் ரயில்வே போர்டின் துரோகத்தை அம்பலத்திற்கு கொண்டு வந்த தனிப்பெருமை தென்னிந்திய ரயில்வேத் தொழிற் சங்கத்திற்கு உண்டு.

### காரியதரிசியின் ரிப்போர்ட்

27-ந் தேதி காலை தோழர் M. கல்யாணசுந்தரத்தின் தலைமையில் கூட்டம் ஆரம்பமாயிற்று. தலைவரின் இரண்டு மணி நேர முன்னுரை கூட்டத்தின் முக்கியத்துவத்தை நன்கு உணர்த்தியது. பொதுக் காரியதரிசி தோழர் M. அனந்த நம்பியார் கடந்த 9-வது மகாநாட்டிற்கு பிறகு நிகழ்ந்துள்ள முக்கிய நிகழ்ச்சிகளையும் சங்க வளர்ச்சியையும் எடுத்துரைத்தார். ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனம் கோரியுள்ளபடி அட்ஜூடிகேட்டர் நியமனம் செய்யவும் ரயில்வே போர்டு மறுத்துவிட்டது. இனி ஒவ்வொரு ரயில்வேயிலும் வேலை நிறுத்தம் செய்ய ரயில்வே போர்டு தூண்டுகிறது. இது விஷயமாகத் தொழிலாளர்கள் அபிப்பிராயம் என்ன என்பதை ஓட் எடுப்பதன் மூலம் தெரிவிக்கவேண்டும். இன்றிருக்கும் நெருக்கடியில் வேறு வழி கிடையாதென்று கூறி முடித்தார். பின்னர் 34 கிளைச்சங்க காரியதரிசிகளும் தங்கள் கிளைகள் எவ்வாறு வேலை செய்கின்றன என்பதைக் குறித்து அறிக்கைகள் சமர்ப்பித்தனர்.

**நமது ரயிவே நிருபர்**

### பிரதிநிதிகள் பேச்சு

28-10-45-ந் தேதி காலை மீண்டும் கூட்டம் தொடங்கியதும், வேலை நிறுத்த ஓட் எடுப்பதைக் குறித்தும், வரப்போகும் தேர்தலில் அரசியல் கட்சிகளுக்கும் தொழிற் சங்கத்திற்கும் இருக்கவேண்டிய தொடர்பு ஆகிய இவ்விஷயங்களைக் குறித்து மட்டும் முடிவு எடுக்கவேண்டுமென்றும் தலைவர் சொன்னதை பிரதிநிதிகள் ஆமோதித்தனர்.

வேலை நிறுத்த ஓட் எடுப்பதைத் தவிர வேறு வழியில்லையென்று தோழர் காத்தமுத்து (மாயவரம் கிளைக் காரியதரிசி) ஆரம்பித்து வைத்தார். இதை ஆதரித்து, ஒவ்வொரு டிபார்ட்மெண்டிலிருந்தும் பல தோழர்கள் ஆவேசத்துடன் பேசினர். யாரும் ஆட்சேபணை என்பதே தெரிவிக்கவில்லை. சில சந்தேகங்கள் மட்டும் கேட்கப்பட்டன. அந்த சந்தேகங்கள் எல்லாம் தக்கபடி தெளிவாக்கப்பட்டன. பின்னர் 'வேலை நிறுத்த ஓட்' எடுக்க மத்திய சங்க நிர்வாகிகளுக்கு அதிகாரமளிக்கும் தீர்மானம், தோழர் P. M. சுப்ரமணியம் (I பயர்மென்) பிரரேபிக்க தோழர் கிருபாபுரி (திருச்சி ஜங்ஷன் கிளைக் காரியதரிசி) ஆமோதிக்க ஏகமனதாக நிறைவேறியது.

பிரயாண வசதிகள் அதிகரிக்கவும், புதிய ரயில்வேக்கள் போடவும், பிரயாணக் கட்டணங்களைக் குறைக்கும் மார்க்கங்களையும் எடுத்துக்காட்டும் 16 யோசனைகளும் இந்தத் தீர்மானத்திலடங்கியிருக்கின்றன. இந்தத் தீர்மானம் நிறைவேறினால் நாட்டிலுள்ள வேலையில்லாத் திண்டாட்டத்தையே தீர்க்கமுடியும். ரயில்வேயும் அபிவிருத்தியடைந்து பொருளாதார சீர்குலைவைத் தடுக்க முடியும். இந்தத் தீர்மானம் வெறும் ரயில்வேத் தொழிலாளர்களின் குறைமட்டுமல்ல. பொது மக்களின் கோரிக்கைகளாகும்.

### பொதுத் தேர்தலும் யூனியனும்

பின்னர் தேர்தல் விஷயமாக ஆலோசித்து தீர்மானிக்கப்பட்டது. இந்த முடிவைப்பார்த்தாலும் ஜனநாயகம்தான் தொழிற்சங்கத்தின் ஜீவசக்தி என்பது புலனாகும். காங்கிரஸ், கம்யூனிஸ்டு, முஸ்லிம் லீக், தாழ்த்தப்பட்டவர், கிறிஸ்தவர், திராவிடக் கழகம் இன்னும் என்னென்ன அரசியல் கட்சிகளிலிருந்தபோதிலும், தொழிலாளர்களின் பிரச்னைகளிலும் தேசத்தின் பொது லக்ஷியங்களிலும் ரயில்வேத் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு நிற்பது சாத்தியமாகையால கட்சி துவேஷங்களுக்கு இரையாகக் கூடாதென்று எச்சரிக்கை செய்ததோடு, அரசியல் கட்சிகள் ஒருவரை மற்றவர் தூஷிப்பதை நிறுத்தி அபிப்பிராய பேதங்களை தேர்தல்மூலம் பொதுமக்களின் தீர்ப்பிற்கு விடவேண்டுமென்று கோரியது. ரயில்வேத் தொகுதி சம்பந்தப்பட்ட வரையில், எல்லா அரசியல் கட்சியினருக்கும் சம உரிமை அளிக்கும். யார் வேண்டுமானாலும், எந்த அரசியல் கட்சியின் சார்பிலும் தேர்தலுக்கு நிற்கவும், அவரவர் கொள்கைக்கேற்ப ஓட்டளிக்கவும், நேர்மையான முறையில் பிரசாரம் செய்யவும் உரிமை உண்டு என்று முடிவு செய்யப்பட்டது.

தென்னிந்திய ரயில்வேத் தொழிற் சங்கத்தில் கம்யூனிஸ்டுகள் 'ஆதிக்கம்' செலுத்துகிறார்களென்று ஸ்ரீ காமராஜ் நாடார் போன்ற காங்கிரஸ் தலைவர்கள் வாய் கூசாது பேசுகின்றனர். ஆனால் தேர்தல் சம்பந்தமாக தென்னிந்திய ரயில்வேத் தொழிற்சங்கம் செய்துள்ள முடிவு எந்தக் கட்சியினரும் ஆதிக்கம் செலுத்த முடியாதவாறும்; அல்லது பிளவு ஏற்படுத்த முடியாதவாறும் அமைந்துள்ளது கம்யூனிஸ்டுகளுக்கும் காங்கிரசிற்கு மிடையேயுள்ள பிளவைப் பயன்படுத்திக்கொண்டு, கொஞ்சங்கூட ஹிருதயமற்ற முறையில் தேசத்திலேயே முதன்மை ஸ்தானம் வகிக்கும் மாபெரும் சங்கமாகிய தென்னிந்திய ரயில்வேத் தொழிற் சங்கத்தை காங்கிர

(9-ம் பக்கம் பார்க்க)

# எஞ்ஜினீரிங் தொழிலாளர் விழா!

## "தொழில் வளர திட்டமிடுக"

பின்னி பிச் என்ஜினீரிங் தொழிலாளர் சங்கத்தின் மூன்றாவது ஆண்டுவிழா 20-10-45ல் சென்னை மெமோரியல் ஹாலில் தோழர் வி. சக்கரைச் செட்டியார் (அ. இ. தொ. ச. காங்கிரஸ் உப தலைவர்) தலைமையில் விமரிசையாக நடந்தேறியது.

செங்கொடியை ஏற்றிவைத்துப் பேசுகையில் தோழர் எம். கல்யாணசுந்தரம் (தெ. இ. ரயில்வே தொழிற் சங்க தலைவர்) சென்னை மாகாணத்தில், அதிலும் குறிப்பாக நம் தமிழ் நாட்டில் என்ஜினீரிங் தொழில் வளர திட்டமிடப்பட வேண்டிய அவசியத்தைஎடுத்துக்காட்டி, அதற்காக சங்கம் திட்டமிட்டு மக்களிடையே கிளர்ச்சி செய்யவேண்டுமென்றும், தொழிலாளரின் நல உரிமைகளைப் பாதுகாக்க செங்கொடியின் கீழ் மேலும் மேலும் திரண்டெழும்படியும் வலியுறுத்தினர்.

### சங்கத்தின் சாதனைகள்

சென்ற ஆண்டில் சங்கம் வளர்ச்சியடைந்ததைப்பற்றி சங்கத்தின் காரியதரிசி தோழர் டி. ஆர். கணேசன் சமர்ப்பித்த ரிப்போர்ட்டில் சில ருசிகரமான விஷயங்கள் தென்பட்டன. டிபன் ஷெட் வசதி தொழிலாளருக்கு கிடைத்தது; ஓரளவுக்குஒரு கிரேடு முறையை அமுலுக்குக் கொண்டுவரும்படி மானேஜ்மென்டை நிர்ப்பந்தித்து பல தொழிலாளர்கள் சம்பள உயர்வு பெற்றது; பல காரணங்களைச் சொல்லி டிஸ்மிஸ் செய்யப்பட்ட பூங்காவனம், சிட்டிபாபு, சுப்ரமணி, சின்னதம்பி, முருகேச நாயக்கர் முதலியோரை திரும்ப வேலைக்கு எடுத்துக்கொள்ளும்படி செய்தது; ஹார்பர் பாஸ் (Harbour Pass)க்காக தொழிலாளியே தன் கையிலிருந்து ரூபாய் 4 செலவு செய்து, தனது போட்டோ ஒன்றைக் கொண்டுவரும்படி மானேஜ்மென்ட் நிர்ப்பந்தித்ததை எதிர்த்து மானேஜ்மென்டே அந்த போட்டோச் செலவை ஏற்றுக்கொள்ளும்படி செய்தது; இவை போல பல. அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் மகாநாட்டிற்கு ரூபாய் 200 வரை நன்கொடையளித்து, 50 செந்தொண்டர்களை மகாநாட்டு சேவைக்கு அனுப்பியதையும் பாராட்டக்கூடிய விஷயங்கள். ஆகவே சங்கத்தின் அங்கத்தினர்கள் 500ல் இருந்து 800 ஆக உயர்ந்ததில் வியப்பில்லையல்லவா?

கார்ப்பரேஷன் கவுன்சிலர் ஸ்ரீ திருவேங்கட நாயக்கர், எம். எஸ். எம் ரெயில்வே யூனியனைச் சேர்ந்த தோழர்கள் குப்புசாமி நாயக்கர் V. S சோமசுந்தரம் முதலியோர் சங்க வளர்ச்சியைப் பாராட்டினர்.

### சுபீட்சத்திற்கு வழி

தேர்தல் முடியும்வரை அட்வைசர் ஆட்சியை நிலை நிறுத்தும் வேவல் திட்டத்தைக் கண்டித்தும், வேலையில்லாத் திண்டாட்டம், உணவுப் பஞ்சம், துணிப்பஞ்சம் இவைகளை நீக்குவதற்கான திட்டங்களை அடிப்படையாகக்கொண்டு அரசியல் கட்சிகள் ஒன்றுபட்டு தேர்தல் பிரசாரத்தில் ஈடுபடவேண்டுமென்று கோரியும், சுதந்திர இந்தியாவின் வருங்காலத்தை நிர்ணயிக்க வயது வந்தவர்கள் எல்லோருக்கும் வோட்டுரிமை வேண்டுமென்று வற்புறுத்தியும், தேச சுதந்திரத்திற்கு தேசிய ஒற்றுமையே ஒரே வழி என்று வற்புறுத்தியும் ஒரு தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

என்ஜினீரிங் தொழிலாளர் சங்கங்களின் அகில இந்திய மகாநாடு ஒன்றைக் கூட்ட அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் திட்டமிட்டிருப்பதை வரவேற்று; அந்த மகாநாடு கூடுவதற்கு முன் டிசம்பர் கடைசி வாரத்தில் சென்னை மாகாணத்தின் என்ஜினீரிங் தொழிலாளர் சங்கங்களை கூட்ட ஏற்பாடு செய்வதென்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

என்ஜினீரிங் தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்குவதைக் கண்டித்தும், 1939 வருட புள்ளி விபரப்படி சென்னை மாகாணத்தில் 37 என்ஜினீரிங் பட்டறைகளில் 3900 பேர்தான் வேலையில் ஈடுபட்டிருந்தனர். மாகாணத்தின் 4½ கோடி மக்களுக்குத் தேவையான இரும்பு எஃகு சாமான்களை உற்பத்தி செய்ய என்ஜினீரிங் தொழில் மேலும் மேலும் பன்மடங்கு வளர திட்டமிடப்பட வேண்டும். ஒரு தொழிலாளியும் வேலையிலிருந்து நீக்கப்படக்கூடாதென்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

ஒரு வருட சர்வீசானவர்களை 1946 ஜனவரி முதல் தேதியிலிருந்து பர்மனென்ட் செய்ய முதலாளி ஒப்புக்கொண்டபோதிலும் வாரத்திற்கு 44 மணி வேலை, சனிக்கிழமை அரைநாள் வேலை, பண்டிகை நாட்களுக்கு சம்பளம், 1 தம்பிடி, 1½ தம்பிடி வருடாந்திர உயர்வை ஒழித்து சரியான கிரேடு முறை வேண்டுமென்ற கோரிக்கைகளை முதலாளி மறுத்ததைக் கண்டித்தும், இக்குறைகளை உடனடியாக அடைவதற்கான எல்லா முயற்சிகளையும் எடுப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

1946 ஜனவரியிலிருந்து 1 வருட சர்வீசானவர்களுக்கு தொடர்ந்தாற்போல் 10 நாள் லீவு பாக்டரி சட்டம் வற்புறுத்துகின்றது. இதைப் பயன்படுத்திக்கொண்டு மூன்று வருட சர்வீசானவர்களுக்கு இப்பொழுது தரப்படும் 10 நாள் காஷ்வல் லீவை நிறுத்த முற்படுவதைக் கண்டித்து இந்த 10 நாள் லீவில் கை வைக்கக்கூடாதென்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. கல்கத்தா 4500 என்ஜினீரிங் தொழிலாளர்கள் போனஸிற்காக நடத்தும் வேலை நிறுத்தத்தை ஆதரித்தும், மேட்டூர் கெமிக்கல் தொழிலாளர்களின் குறைகளை ஆதரித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. கடைசியாக தோழர் ப. ஜீவானந்தம் செங்கொடியின் மகத்வத்தைப்பற்றி விரிவாகப் பேசினர்.

# பி. அண் ஸி. தொழிலாளர்களுக்கு டாக்டர்களால் தொல்லை!

*சென்னை பி. அண் ஸி. மில் நிர்வாகத்தின் போக்கைப்பற்றி தொடர்ந்தாற்போல சென்றவாரங்களில் எழுதிவந்துள்ளோம். இவ்வாரம் அந்த மில்லின் சுகாதார டிபார்ட்மெண்டிலுள்ள அழுக்குகளைப்பற்றி சில தகவல்கள் கிடைத்துள்ளன. பி. அண் ஸி. மில் என்று சொன்னால், 'ஆகா, நேர்த்தியாக திறமையாக நடத்தப்படும் மில்லல்லவோ அது? வெள்ளைக்காரன் வெள்ளைக்காரன்தான் சார்!' என சிலர் சொல்வதைக் கேட்டிருப்பீர்கள். அந்த நேர்த்தியான நிர்வாகத்துக்கு பின்வரும் ரிப்போர்ட் ஒரு சர்டிபிகேட்!*

சொறி, சிரங்கு, ரணம், சீதபேதி, வயிற்றுவலி, கை சுளுக்கு, கால் சுளுக்கு என்று பக்கிங்காம அண் கர்னாடிக் மில்களின் டாக்டர்களிடம் தொழிலாளர்கள் தெரிவித்தால் டாக்டர்கள் தருமா மீட்டரை வைத்து பார்ப்பர்!

வியாதியஸ்தரை பரிசோதிக்கும் இடத்திற்கு போ என்று சொல்லிவிட்டு, பிறகு "எங்கே வந்தே? சோம்பேறி" என்று டாக்டர்கள் கத்துவர். இப்படி சொல்லலாமா டாக்டர் ஸார் என்று தொழிலாளி நியாயமாகக் கேட்டால், குயரி எழுதி மில் மானேஜரிடம் அனுப்பி விடுவர். மானேஜர் உடனே சம்பந்தப்பட்ட தொழிலாளிக்கு வார்னிங் கொடுத்து விடுவார்! 3 வார்னிங் வாங்கினால் கேட் பாஸ்! சில சமயங்கள் ஒரு வார்னிங் வாங்கினால்கூட கேட் பாஸ்!

வேலையே செய்ய முடியாத நிலைமையில் அசௌகரியமாய் இருக்கும் பல தொழிலாளர்களை இந்த டாக்டர்கள் "சௌகரியமா இருக்கு போய் வேலை செய்" என்று வாய் கூசாது கூறுவதுண்டு. ஓர் தடவை இந்த மாதிரி டாக்டர் கூறிய சிறிது நேரத்திற்கெல்லாம் மில்லிலேயே ஒரு தொழிலாளி இறந்திருக்கிறார். மில் டாக்டர்களின் அபோதித் தனத்திற்கு எல்லையில்லை!

வியாதி என்று கூறிவரும் சில தொழிலாளர்களை தோட்டியைவிட்டு "கழுத்தைப் பிடித்துத் தள்ளு!" என்ற ஓர்புது தினுசான "மருந்தை" இந்த விசித்திர பிராணி — டாக்டர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள்!

உடம்பு அசௌகரியமாயிருக்கு, 1 நாள் லீவ் கொடுத்தால் போதுமென்று டாக்டரிடம் தொழிலாளர்கள் கேட்டால், 10 நாள் லீவ் கொடுத்துவிடுவார். ஐயையோ பத்து நாள் லீவ் எனக்கு எதற்கு இந்த மாதம் குடும்ப செலவிற்கு என்ன செய்வது என்று தொழிலாளி சொன்னால், முடியாது 10 நாள் லீவ்தான், அல்லது 7நாள் லீவ் போ என்று விரட்டியடிக்கிறார். 10 நாள் லீவ் அவசியம் வேண்டுமென்று கேட்கும் வியாதியோடு இருக்கும் தொழிலாளிக்கு 1 நாள் லீவ் கொடுப்பார்! பிரதிதினமும் வியாதியஸ்தர் பலர் டாக்டரை வந்து பார்த்து ஒவ்வொரு நாளும் லீவ் வாங்கிக்கொண்டு போகவேண்டுமாம்! ஹிட்லர் தர்பார்தான்! வாயிக்கும் வயிற்றுக்கும் போதாத சம்பளம் வாங்கும் இத் தொழிலாளர்கள் வியாதியாய்இருக்கும்போது ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் வண்டி சத்தம் கொடுத்து மாதவரம், மணல் சேக்காடு, கொடுங்கையூர், ரெட் ஹில்ஸ், ஆயிரம் விளக்கு, ராயப்பேட்டை, ராயபுரம், தண்டையார்பேட்டை, திருவொற்றியூரிலிருந்து மில் ஆஸ்பத்திரி டாக்டரிடம் அன்றாடம் வந்து போகும் காட்சி புத்தியுள்ள எவருக்கும் ஆத்திரத்தை ஊட்டாமலிருக்காது.

மில் ஆஸ்பத்திரி என்று பெயர்தானே ஒழிய, இன்பேஷண்டாக இருக்கும் வசதியே இல்லை!

இக்குறைகளை போக்க உடனே மில் மானேஜ்மெண்டு முன் வருமா?

# உள்நாட்டு யுத்தத்தை ஆரம்பித்தது!

## சீன பிற்போக்குக் கும்பலின் சதி!

சைனாவிலுள்ள ஸீயுவான், ஹோபே, ஷென்ஸி, ஷான்ஸி, ஷாண்டங், ஹொனான், செகியாங், கிஷிங்ஸீ, குவாங்டங் முதலிய 11 மாகாணங்களில் சீன கம்யூனிஸ்டுப் படைகளுக்கும், கோமிண்டாங் படைகளுக்குமிடையே பயங்கரமான போராட்டம் நடந்துவருகிறது. கடைசியாக வந்த செய்தி, தெற்கு சைனாவிலும் சண்டை நடப்பதாகக் கூறுகிறது. நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ 4 கோடி சீன மக்கள் இந்தப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளார்கள்

இரு கட்சிகளின் படைகளையும், யெனான் சர்க்காரின் ஆட்சியின் கீழுள்ள பிரதேசங்களையும் எப்படி, யார் நிர்வாகம் செய்வது என்பது பற்றி பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருக்கும் பொழுது (ஏனைய பிரச்னைகளில் உடன்பாடு ஏற்பட்டது) சைனாவிலுள்ள பிற்போக்காளர்கள், திரும்பவும் சைனாவை உள் நாட்டுக் கலகத்தில் ஆழ்த்த ஆரம்பித்து விட்டார்கள்.

### சண்டையைத் தவிர்க்க கம்யூனிஸ்டுகள் முயற்சி

சீனகம்யூனிஸ்டுக் கட்சியின் மத்ய கமிட்டி, தங்களுடைய படைகளுக்கு சில தினங்களுக்கு முன்பு கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்தது:

"நாங்கிங், ஷாங்காய், ஹாங்கௌ நிங்போ ஆகிய நகரங்களில் உள்ள ஜப்பானியத் துருப்புகள் எங்களிடம்தான் சரணாகதி யடையவேண்டுமென்று கோமிண்டாங் துருப்புகளோடு வாதாட வேண்டாம். ஏனெனில், ஜப்பானியத் துருப்புகளும், சைனாவிலுள்ள பிற்போக்காளர்களும் உள்நாட்டுக் கலகத்தை ஆரம்பிக்க, இதை ஒரு சாக்காக உபயோகித்துக் கொள்வார்கள்......மேலும், சமீபத்தில் கோமிண்டாங் கட்சிக்கும், கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் இடையே பேச்சு வார்த்தைகள் நடந்தபொழுது, கம்யூனிஸ்டுக் கட்சி கொடுத்த வாக்குறுதிப்படி, யாங்ஸி நதிக்குத் தெற்கேயுள்ள சகல துருப்புகளையும் உடனே வட பாகத்திற்கு போகும்படி உத்திரவிடுகிறோம்..."

கம்யூனிஸ்டுக் கட்சி, உள்நாட்டுக் கலகத்தைத் தவிர்க்க எவ்வளவோ விட்டுக்கொடுத்தது. ஆனால் இவ்வாறு பின்வாங்கும் படைகளை கோமிண்டாங் துருப்புகள், இடைமறித்துத் தாக்கிவருவதாக யெனான் செய்தி கூறுகிறது.

சில நாட்களுக்குமுன்பு, கோமிண்டாங் துருப்புகளின் நடமாட்டத்திற்கு, யெனான் சர்க்காரின் ஆட்சியின்கீழுள்ள பிரதேசங்களிலுள்ள ரயில்வேக்களை உபயோகப்படுத்திக் கொள்ள அனுமதியளிக்க வேண்டுமென்று கோமிண்டாங் கோரிற்று. துருப்புகளைத்தவிர, சாமான்களையோ, சாதாரணபொதுமக்களையோ ஏற்றிச் செல்ல அனுமதிப்பதாக கம்யூனிஸ்டுக் கட்சி பதிலளித்தது. ஒரு முடிவுக்கு வராமல், பேச்சு வார்த்தைகள் நடந்துகொண்டிருக்கும்பொழுது கோமிண்டாங்துருப்புகள் கம்யூனிஸ்டுத் துருப்புகளைத் தாக்கத் துவங்கிவிட்டன.

### ஜப்பானியரைத் திரட்டுகிறார்கள்

"சுங்கிங் சர்க்கார், தெற்கு ஷான்ஸி, வடக்கு ஹொனான், கிழக்கு ஷாண்டங் ஆகிய பகுதிகளிலுள்ள ஜப்பானியத் துருப்புகளை கம்யூனிஸ்டுகளுக்கு எதிரிடையாகப் போராட ஒன்றுதிரட்டி வருகிறது" என்று கம்யூனிஸ்டுப் பிரமுகர் ஒருவர் கூறியதாக அ. பி. செய்தி கூறுகிறது. (ஸ்டேட்ஸ்மென் அக்டோபர் 31.)

"சைனாவின் கிழக்குப் பிரதேசங்களில் ஏராளமான ஜப்பானியப் படைகள் சரணாகதியடையத் தயாராக இருந்தன. ஜப்பானியர்களால் அமைக்கப்பட்ட படைகளும் இருந்தன. இந்தப் படைகளில் மொத்தம் 8 லட்சம் பேர்கள் இருக்கிறார்கள். இதில் 5 லட்சம் பேர்கள் கோமிண்டாங் படைகளை விட்டு முன்பு ஓடி ஜப்பானியர்களோடு சேர்ந்துகொண்டார்கள். இவர்களோடு போராடிக் கொண்டிருந்த கம்யூனிஸ்டுகளை விட அதிகமாக கோமிண்டாங் சர்க்கார் அவர்கள்மீது கருணைகாட்டி வருவது ஆச்சரியகரமான விஷயமல்ல. சென்ற ஆகஸ்ட் மாதம் மார்ஷல் சியாங்கேய்ஷேக், இவர்களை அந்த இடத்திலேயே இருக்கும்படியும், "ஒழுங்கு முறையை"ப் பாதுகாக்கும்படியும் உத்தரவிட்டிருந்தார். இந்தப் படைகள் கம்யூனிஸ்டு பிரதேசங்களின் எல்லைப்புறங்களில் இருந்ததால், கம்யூனிஸ்டுகளிடம் சரணாகதியடையாமலிருக்கும் பொருட்டே இத்தகைய உத்தரவிட்டாரென்று தெரிகிறது......" என்று 'ஹிந்து' பத்திரிகை எழுதுகிறது.

இதன் அர்த்தமென்ன? ஒரு உள்நாட்டுக் கலகத்திற்கு ஆயத்தம் செய்துகொண்டிருந்தார்கள், கம்யூனிஸ்டுகளை நசுக்க சூழ்ச்சி செய்து கொண்டிருந்தார்களென்பதே.

### அமெரிக்கா தலையிடுகிறது

"அமெரிக்காவின் ஆகாய விமானங்கள், ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த பகுதிகளுக்கு கோமிண்டாங் துருப்புக்களை ஏற்றிச் செல்கின்றன. வட சைனாவில், 60,000 அமெரிக்க கடற்படை இருக்கிறது. இதை சைனாவில் உள்நாட்டு அரசியல் விவகாரத்தில் அமெரிக்கா தலையிடுவதாகவே கருதுகிறோம்" என்று ஒரு சீன கம்யூனிஸ்டுக் கட்சியின் பிரமுகர் கூறியதாக எ. பி. ஏ. கூறுகிறது.

டின்ஸின் துறைமுகத்திலிருந்து 135 மைல் வடகிழக்கிலுள்ள சின்வாங்டாவ் என்ற துறைமுகத்தில் அமெரிக்கக் கப்பலிலிருந்து, கோமிண்டாங் படைகள் இறங்கியிருப்பதாக நியூயார்க் ரேடியோ கூறுகிறது.

அமெரிக்கா, சைனாவில் உள்நாட்டுக் கலகத்தில் பிற்போக்காளர்களுக்கு உதவி புரிந்து வருவதை சைனாவிலுள்ள அமெரிக்கப் படைகளின் தலைவர் வெட்மேயர் மறைக்கப் பார்க்கிறார்.

"சைனாவின் மத்திய சர்க்காருக்கு அமெரிக்கா உதவி புரிவதை சீன கம்யூனிஸ்டுக் கட்சியின் படைகளுக்கு விரோதமாக நடந்துகொள்கிறது என்று அர்த்தம் கொள்ளக்கூடாது" என்கிறார் வெட்மேயர்.

இதுவரையிலும் நேரடியாக அமெரிக்கப் படைகள் போராடவில்லை யென்றாலும், உருப்படியான உதவி புரிந்து வருகிறது கோமிண்டாங் படைகளுக்கு.

### கம்யூனிஸ்டுப் படைக்கு சோவியத் ஆதரவா?

கம்யூனிஸ்டுகள் 15 அல்லது 20 டாங்கிகளை உபயோகிப்பதாக ஷான்ஸி மாகாணப் படைகளின் தலைவர் மார்ஷல் யென்ஸீ ஷான் கூறுகிறார்.

"இந்த விஷயத்தை இப்பொழுது தான் முதன்முதலில் கேட்கிறோம். ரஷ்யாவிலிருந்து நாங்கள் உதவிப் பெற்று வருகிறோமென்று கோமிண்டாங் பிரசாரகர்கள் கூறுவதன் அர்த்தம் யாதெனில், அவ்வாறு கூறி அவர்கள் அமெரிக்காவிலிருந்து உதவியைப் பெற முயற்சிக்கிறார்கள்" என்று ஒரு சீன கம்யூனிஸ்டு பிரமுகர் கூறினார் என்று ராய்ட்டர் கூறுகிறது.

இத்துடன், சோவியத் யூனியன் சீன கம்யூனிஸ்டுகளுக்கு உதவி புரிந்து வருகிறது என்று கூறி, சீன-சோவியத் உறவை முறிக்க பிற்போக்காளர்கள் முயற்சி செய்து வருகிறார்கள்.

### சியாங்-காய்-ஷேக் மௌனம்

கோமிண்டாங் கின் தலைநகரமான சுங்கிங்கிலிருந்து வரும் செய்தி, கம்யூனிஸ்டுகள்தான் உள்நாட்டுக் கலகத்தைக் கிளப்பியிருக்கிறார்கள் என்று கூறுகிறது. ஜெனரலிஸிமோ சியாங்-கேய்-ஷேக் மௌனம் சாதிக்கிறார். அவருடைய பூர்ண அனுமதியின்மேல், ஹோயிங்சின் போன்ற பிற்போக்கு பாசிஸ்டுகள் உள்நாட்டுக் கலகத்தை ஆரம்பித்திருக்கிறார்களா? அல்லது ஆங்காங்குள்ள பிற்போக்கு பாசிஸ்டு ராணுவத் தலைவர்களே ஆரம்பித்திருக்கிறார்களா வென்பது தெளிவாகத் தெரியவில்லை. கடந்த 20 வருடங்களாக உள்நாட்டுக் கலகத்தைத்

(12-ம் பக்கம் பார்க்க)

மோஸே டங்

# மலேயாவில் பிரிட்டன் போக்கு

## குறைந்த கூலி—விலைவாசிகள் ஏறுகின்றன!

மலேயாவில் போதிய உணவுப் பொருள்கள் கிடையாது. விலைவாசிகள் விஷம்போல் ஏறுகின்றன. குறைந்த சம்பளம் கொடுக்கப்படுகிறது தொழிலாளருக்கு. பஞ்சம் கோரதாண்டவமாடுகிறது. எனவே, சிங்கப்பூர், இபோ, தைட்பிங் முதலிய இடங்களில் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள். கையாலாகாத பிரிட்டிஷ் ராணுவ சர்க்கார் மலேயாவிலுள்ள மக்களின் நலன்களைப் பாதுகாக்க உருப்படியான திட்டங்களை வகுக்காமல், உணவு வேண்டுமென்று கேட்கிற மக்களுக்கு தண்டுகளை கொடுத்து வருகிறார்கள் ஆனால் 25 லட்சம் சீனர்களும், 20 லட்சம் மலாய்க்காரர்களும், 8 லட்சம் இந்தியர்களும் ஒன்றுபட்டுப் போராடி வருகிறார்கள்.

உணவுப் பொருள்களின் விலைவாசிகள் விஷம்போல் ஏறியிருக்கின்றன. உதாரணமாக:

| | 1941 | 1945 |
|---|---|---|
| பன்றி இறைச்சி | 26 காசு | 100 காசு |
| அரிசி | 35 ,, | 140 ,, |
| காய்கறி | 40 ,, | 80 ,, |
| மீன் | 24 ,, | 100 ,, |

### பணமில்லை

பிரிட்டிஷார் மலேயாவில் நுழைந்தவுடன், ஜப்பானியர்களின் நோட்டுகளுக்கு மதிப்பு கிடையாது என்று பிரகடனம் செய்தனர். மக்களிடமிருந்த பிரிட்டிஷ் நாணயங்களை முன்னமேயே ஜப்பானியர் பறிமுதல் செய்துவிட்டதால், ஜப்பானியர் நாணயம்தான் கையிலிருந்தன. எனவே, இப்பொழுது பொதுமக்களிடமோ, வியாபாரிகளிடமோ, ஒரு காசுகூடக் கிடையாது. மக்கள் கஷ்டப்படுகிறார்கள்.

ஆனால், சிங்கப்பூரிலிருந்த ஜப்பானிய பாங்கிலிருந்து, 10 கோடி டாலர்கள் மதிப்புள்ள தங்கத்தையும் மக்களிடமிருந்து, ஜப்பானியர் பலாத்காரமாக பறிமுதல் செய்த முந்திய பிரிட்டிஷ் நாணயங்களையும், பிரிட்டிஷார் கைப்பற்றியிருக்கிறார்கள். இந்தப் பணத்தை ஜப்பானியர் நாணயங்களுக்கு ஈடாக உபயோகித்து, மக்களுக்கு உதவி புரிய மறுக்கிறார்கள்.

வியாபாரிகளும் பெரிதும் கஷ்டப்படுகிறார்கள். பிரிட்டிஷ் பாங்குகளிலிருந்து, குறைந்த காலத் தவணையில் (ஒரு வருடத்திற்குள் கொடுக்க வேண்டும்) கொள்ளை வட்டிக்கு கடன் வாங்கி வியாபாரம் செய்து வருகிறார்கள்.

பண நெருக்கடியை ஒரு சாக்காக உபயோகித்துக்கொண்டு, முதலாளிகள் தொழிலாளர்களின் சம்பளத்தைக் குறைத்து வருகிறார்கள்.

இத்தகைய நெருக்கடிக்குக் காரணம் எங்களுடைய நாணயச் செலாவணிக் கொள்கையல்ல என்று பிரிட்டன் கையை விரிக்கிறது. ஆனால் மலேயாவின் கடற்கரைகளில் செல்லும் படகுகள் இல்லாமையே இதற்குக் காரணம் என்கிறார்கள். இந்தக் கண் மூடித் தனமான நாணயச் செலாவணிக்கொள்கை படகு முதலாளிகளின் வியாபாரத்தைச் சிதறடித்து விட்டது. தேவையான மூலதனம் இல்லாததால், தான் படகுகள் ஓடாமல் நிற்கின்றன.

### எங்கும் பஞ்சம்

எனவே 3லட்சம் பேர்கள் சிங்கப்பூரில் மாத்திரம் வறுமையால் துடிதுடிக்கிறார்கள். ஒரு தனி நபருக்கு 45 வெள்ளி குறைந்தபட்சம் தேவையாயினும், ஒரு குடும்பத்திற்கு 15 வெள்ளிதான் நிவாரண உதவியாக கொடுக்கப்படுகிறது.

சிறிய ரப்பர் தோட்ட முதலாளிகளும் பெரிதும் கஷ்டப்படுகிறார்கள். சிலோனில் ஒரு பவுண்டு ரப்பரின் விலை 65 காசு. மலேயாவிலோ ஒரு பவுண்டு ரப்பரின் விலையை 36 காசுகளென நிர்ணயித்திருக்கிறார்கள். எனவே சீன வியாபாரிகளையும், தொழிலாளர்களையும், இந்திய வியாபாரிகளையும், தொழிலாளர்களையும், இந்த நாணயச் செலாவணிக்கொள்கை பெரிதும் பாதித்திருக்கிறது.

### உணவுப் பஞ்சம்

மலேயா கம்யூனிஸ்டு கட்சியும் ஜெனரல் லேபர் யூனியனும், பாஸிஸ்டு எதிர்ப்பு ஐக்கிய முன்னணிக் கட்சியும் கஷ்டப்படும் மக்களுக்கு உதவிபுரிந்து வருகின்றன. இந்தக் கட்சிகள் பல உருப்படியான திட்டங்களை சமர்ப்பித்தன ஆனால் யாவும் நிராகரிக்கப்பட்டுவிட்டன.

ஆயினும் இந்தப் பொதுஜனக் கட்சிகள் வாளாவிருக்கவில்லை. ஒரே ஒரு வாரத்தில் 2000 பவுண்டு உருளைக் கிழங்கையும், 5000 பவுண்டு அரிசியையும் கிராமங்களிலிருந்து வசூலித்து கஷ்டப்படும் மக்களுக்கு வினியோகித்தன. இத்துடன் பாஸிஸ்டு எதிர்ப்பு முன்னணிக் கட்சி கீழ்க்கண்ட கோரிக்கைகளைச் சமர்ப்பித்திருக்கின்றது:

'1. மலேயாவின் கடற்கரைகளில் ஓடும் கப்பல்கள், படகுகள் முதலியன மீது விதித்துள்ள தடையை ரத்து செய்யவேண்டும்.

2. குறைந்த வட்டிக்கு கடன் கொடுக்கவேண்டும்.

3. சம்பள உயர்வு.

4. வேலை யில்லாதவர்களுக்குப் போதிய உதவியளித்தல்.

சீனர்கள், இந்தியர்கள், மலாய்காரர்கள் ஆகிய சகலதேசிய இனத்தினரும் இந்தக் கோரிக்கைகளைப் பெற ஒன்று திரண்டுள்ளார்கள்.'

### பிரெஞ்சு-இந்தியாவில் தேர்தல்

# முடிவு நேர்மையானதல்ல

பிரான்ஸ் தேசத்து மக்கள் தங்களுடைய அரசியல் அமைப்பை நிர்ணயஞ்செய்ய 21-10-45ல் பிரதிநிதிகளைத தேர்ந்தெடுத்தனர். பிரெஞ்சு சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக இன்னும் திகழும் பிரெஞ்சு இந்தியாவிலும் இச்சபைக்கு ஒரு பிரதிநிதி தேர்ந்தெடுப்பதற்காக தேர்தல் நடந்தது.

புதுச்சேரி, காரைக்கால், சந்திரநாகூர், மாஹி, ஏனம் முதலிய நகரங்களும் அதைச் சுற்றியுள்ள சிறு பிரதேசமும்தான் பிரெஞ்சு சாம்ராஜ்ஜிப ஆதிக்கத்தின் கீழுள்ள பிரெஞ்சு இந்தியா. இந்த பிரதேசத்து மக்கள் அருகாமையிலுள்ள தமிழர், மலையாளிகள், வங்காளிகள், ஆந்திரர்கள் போன்ற தேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள்.

இதுவரையில் இப்பிரதேசத்தில் சிலருக்குமட்டும் ஓட்டுரிமை இருந்து சமீபத்தில் இச்சட்டம் மாற்றப்பட்டது. இந்தச் சட்டத்தின்படி பெண்களுங்கூட ஓட் செய்யும் உரிமை பெற்றனர்.

### ஓட்டு முறை

தேர்தலுக்கு நின்றவர்கள் 6 பேர். அதில் ஸ்ரீ ஜீவரத்தினம், ஸ்ரீ லாம்பேர் சரவான் ஆகிய இருவருக்கும்தான் விசேஷ ஆதரவு. மற்றவர்களுக்கு கிடைத்த எல்லாம் ஓட்டுகளையும் சேர்த்தால் 10 சதம் கூட இல்லை.

பிரெஞ்சு தேர்தல் சட்டத்தின்படி ஓட் செய்வோர் எண்ணிக்கையில் பாதிக்கு மேற்பட்டவர் ஆதரவு கிடைத்த அபேட்சகருக்குத்தான் வெற்றி. பிரெஞ்சு இந்தியாவிலுள்ள மொத்த வாக்காளர்கள் 70,696. அதில் ஓட் போட்டவர்கள் 47,302. ஜீவரத்தினத்துக்கு 22,178 ஓட்டுகள் கிடைத்தது. லாம்பேர் சரவானுக்கு 21,198 ஓட்டுகள்.

முதலில் சர்க்கார் அறிவித்த அறிக்கையில், மெஜாரிட்டி ஓட் கிடைக்கவில்லை. ஆகையால் அபேட்சகருக்கும் மறு தேர்தல் நவம்பர் 4-ந் தேதி நடைபெறும் என்று கூறப்பட்டது. ஆனால் தேர்தல் ஸென்ஸஸ் கமிஷன் ஸ்ரீ ஜீவரத்தினம் வெற்றி பெற்றதாகத் தீர்ப்புக் கூறிவிட்டதென்று அக்டோபர் 29-ந் தேதி செய்தி கூறுகின்றது.

### மர்மம் என்ன?

இதன் மர்மம் என்ன? ஸ்ரீ ஜீவரத்தினத்திற்கு சாதகமாக வேலை செய்து அவருக்கு சாதகமான தீர்ப்பை தேர்தல் ஸென்ஸஸ் கமிஷன் கூறும்படி வேலை நடந்திருக்கிறது. ஜீவரத்தினம் பொதுஜன உணர்ச்சியில் நம்பிக்கை வைக்காதவர். தன்னுடைய பதவியைக் காப்பாற்றிக் கொள்வதற்கு பகீரதப் பிரயத்னம் செய்பவர்.

சமீபகாலத்தில் இருமுறை பிரான்ஸுக்குப் போய்வந்தவர். தனக்கு ஏதோ தனி செல்வாக்கு பிரெஞ்சுக்காரரிடமிருப்பதாகக் கூறி, பெரிய புள்ளிகளுடைய ஆதரவைப் பெறுபவர். பிரெஞ்சு இந்தியாவின் எதிர்காலத்தைப்பற்றி எவ்வித உருப்படியான கொள்கையும் அவருக்குக் கிடையாது.

லாம்பேர் சரவன் தேசிய ஜனநாயக முன்னணியின் பிரதிநிதி. கவர்னர் பொன்வீன் கொடுமைக்கு ஆளானவர். முற்போக்கான அபிப்பிராயம் கொண்டவர். பாஸிஸ எதிர்ப்பு ஸ்தாபனமாகிய 'கோம்பா'வை வளர்த்தவர்களில் ஒரு முக்கியஸ்தர். தொழிலாளர் நலன்களுக்காகப் பாடுபடுபவர். பிரெஞ்சு இந்தியாவின் பரிபூர்ண சுயாட்சிக்காக நிற்கின்றார்.

### தேர்தலின்போது காலிகள் ராஜ்ஜியம்

பிரெஞ்சிந்தியாவில் தேர்தலென்றால் அடிதடி, சண்டை சச்சரவு சகஜம். இத்தத் தடவை அதைக் குறைப்பதற்கு தேசிய ஜனநாயக ஐக்கிய முன்னணி தீவிரமாகப் பாடுபட்டது. ஆனால் மற்றவர்கள் அப்படிப் பாடுபட்டதாகக் கூறமுடியாது.

காரைக்காலில் காலிகள் ராஜ்யம் தேர்தலுக்கு சில நாட்களுக்கு முன்னரேதலைதூக்க ஆரம்பித்துவிட்டது தேசிய ஜனநாயககட்சியின் தொண்டர்கள் வேலை செய்வதற்கு முடியவில்லை. இந்தப் பிரதேசத்திலுள்ள 11000க்கு மேற்பட்ட ஓட்டுகளில் 11,000 ஓட்டுகள் ஜீவரத்தினத்துக்கு கிடைத்ததாம்! மற்ற இடங்களிலெல்லாம் 100 க்கு 50 பேர்கூட ஓட் போடவில்லை. இங்கு மட்டும் 100க்கு 95 பேர் ஓட் போட்டு விட்டார்களாம். அதிலும் ஒருவர் தவிர அனைவரும் ஜீவரத்தினத்திற்கு ஓட் போட்டார்களாம்!!

### சரியல்ல!

இந்த விந்தையைப்பற்றி விமர்சனம் வேண்டியதில்லை. காரைக்காலில் நடந்த தேர்தல் சரியல்லவென்று பிரெஞ்சு சர்க்காருக்குப் பல தந்திகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

ஜீவரத்தினத்தின் சொந்த ஊர் பாண்டிச்சேரி, அந்த பிராந்தியத்தில் அவருக்குக் கிடைத்த ஓட் 9,200, லாம்பேர் சரவானுக்கு 18,942. இதிலிருந்து ஜீவரத்தினத்தை அவருடைய ஊரார் எவ்வளவு தூரம் விரும்புகின்றனர் என்பது தெரியும்.

இந்தத் தேர்தலைப்பற்றி முடிவு கூற நியமிக்கப்பட்ட கமிஷன் இரகசியமாகக் கூடக் கூடாதென்று மற்ற அபேட்சகர்கள் ஆக்ஷேபித்தனர். ஆனால் ஜீவரத்தினம் இரகசியமாகக் கூடுவதை ஆமோதித்தார். கடைசியில் அதன் முடிவு, ஜீவரத்தினம் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்று!

தேர்தல் கமிஷனுடைய முடிவு நியாயமானதல்ல. அதை ஆக்ஷேபித்து பிரெஞ்சு சர்க்காருக்கு தந்திகள் அனுப்பப்பட்டிருக்கின்றன. மறுபடியும் நியாயமான தேர்தல் நடைபெறுமா என்று பொதுமக்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றனர்.

# கிழக்காசிய நாடுகளை அடக்குவதை

## சோவியத் கண்டிக்கிறது

"உலக முழுதும் உள்ள முற்போக்கு சக்திகள், சுதந்திரத்திற்காகப் போராடும் மக்களைத்தான் பரிபூர்ணமாக ஆதரிக்கின்றன. சுதந்திரத்தைப் பெற அவர்களுக்கு உரிமையுண்டு" என்று "நியூ டைம்ஸ்" என்ற சோவியத் யூனியனிலுள்ள பத்திரிகை இன்று (நவம்பர் மாதம் 3-ந் தேதி) இந்தோ சைனா, இந்தோனேஷியா ஆகிய நாடுகளில் நடந்துகொண்டிருக்கும் சுதந்திரப் போராட்டத்தைப்பற்றி விமர்சனம் செய்திருக்கிறது. கிளர்ந்தெழுந்துள்ள சுதந்திர இயக்கங்களுக்கு அனுதாபமும், ஆதரவும் காட்டுவதுடன், பிரிட்டிஷ், டச்சு, பிரஞ்சு ஏகாதிபத்தியங்களை வன்மையாகக் கண்டித்துக் கீழ்க்கண்டவாறு எழுதியிருக்கிறது.

ஜப்பானியரின் பிரசாரம் காலனிகளில், முக்கியமாக இந்தோ சைனாவிலும், இந்தோனேஷியாவிலும், உடனடியாகப் பலனளித்தது. ஏனெனில், இங்குள்ள மக்களுக்கு, ஜீவாதாரமான பிரஜா உரிமைகளை டச்சு, பிரஞ்சு சர்க்கார்கள் அளிக்கவில்லை.

ஜப்பானியரின் ஆதிக்கத்திலிருக்கும் பொழுதே, காலனி மக்கள் அவர்களுக்கு எதிரிடையாகக் கிளர்ந்தெழுந்தனர். ஜப்பானியர் போன பிறகு, தாங்கள் திரும்பவும் பழைய ஏகாதிபத்தியங்களின் அடிமைகளாக மாறுவோம் என்று அவர்கள் நினைக்கவேயில்லை.

ஐக்கிய நாடுகளின் சாஸனம், பாஸிஸத்தை அழித்து, சகல மக்களுக்கும் ஜனநாயக சர்க்காரை ஸ்தாபிக்கப் போதிய ஏற்பாடுகள் செய்யப்படும் என்ற புனிதமான கொள்கையை வெளியிட்டது. இது அடிமை நாட்டு மக்களை உற்சாகப்படுத்தி, காரியத்தில் குதிக்கும்படி தூண்டியதோடு, அரசியல், பொருளாதார சமத்துவத்தையும் விரைவில் அடையலாம் என்பதையும் உறுதிப்படுத்திற்று.

ஜப்பானிய ஏகாதிபத்தியம் தோற்கடிக்கப்பட்ட பிறகு, காலனி மக்கள் தங்களுடைய பழைய அபிலாஷைகளையும், லட்சியங்களையும் கொஞ்சம் கொஞ்சமாக கிரியாம்சையில் பெற்றுவந்தனர்.

இந்தோ-சைனாவிலுள்ள பிரெஞ்சு சர்க்கார், ஜப்பானியரோடு ஒத்துழைத்தனர் என்று பிரெஞ்சு இந்தோ சைனாவிலுள்ள தேசியவாதிகள் கூறுவது, முழுக்கமுழுக்க உண்மையே.

### ஜாவாவில் பிரிட்டனின் போக்கு

இந்தோனேஷியாவில் உண்மையான பொதுஜன தேசிய இயக்கம் தலைதூக்கியிருக்கிறது. உள்நாட்டு விவகாரங்களில் தாங்கள் தலையிடப் போவதில்லை யென்று பிரிட்டிஷ் சர்க்கார் பிரகடனம் செய்தனர். ஆனால் வாஸ்தவத்தில், இந்தோ சைனாவில் பிரெஞ்சு ஆதிக்கத்தையும் இந்தோனேஷியாவில் டச்சு ஆதிக்கத்தையும் திரும்பவும் நிலைநாட்ட இந்த ஏகாதிபத்திய சர்க்கார்களுக்கு பிரிட்டிஷ் படைகள் உதவி புரிந்துவருகின்றன. ஜப்பானியர்களில் பெரும்பாலோர், இன்னும் நிராயுதபாணிகளாக்கப்படவில்லை. நேச நாடுகளிடம் போதிய படைகள் கிடையாதென்பதல்ல இதற்குக் காரணம். ஆனால் அந்த நாடுகளில் கிளர்ந்தெழுந்துள்ள தேசிய இயக்கங்களை நசுக்க ஜப்பானியரை உபயோகப்படுத்தி வருவதால்தான், அவர்களை நிராயுதபாணிகளாக்கவில்லை.

இயற்கையாகவே, பிரிட்டனின் இத்தகைய விபரீதப் போக்கு இந்தோ சைனா மக்களிடையே பெருத்த வெறுப்பையும், ஏமாற்றத்தையும் உண்டாக்கியிருக்கிறது. பிரிட்டனிலுள்ள ஜனநாயகவாதிகளிடையே வியப்பும், பீதியும் ஏற்பட்டிருக்கிறது.

இந்தோ சைனாவிலும், இந்தோனேஷியாவிலும் நிகழும் சம்பவங்கள், அந்த நாடுகளோடு நின்றுவிடவில்லை. அவைகளின் எல்லைகளுக்கு அப்பாலும் எதிரொலிக்கின்றன. உலக முழுதுமுள்ள ஜனநாயகவாதிகள் இந்த நாடுகளுக்குப் பரிபூர்ண ஆதரவளித்து வருகிறார்கள்.

தென்கிழக்கு-ஆசியாவில், பிரிட்டிஷார் சுறுசுறுப்பாக வேலை செய்கிறார்கள். அதேசமயத்தில், இந்தோ சைனாவிலும், இந்தோனேஷியாவிலும் யுத்தத்திற்கு முந்திய பழைய ஏகாதிபத்திய ஆட்சியைத் திரும்பவும் நிலைநாட்டுவது சுலபமான காரியமல்ல என்பதையும் ஆங்கிலேயர்கள் உணர்கிறார்கள். ஆசியாவின் மிகவும் முக்கியமான காலனிகளைக் கொண்டுள்ள நாடுகளில் ஒன்றான இங்கிலாந்து, தென்கிழக்கு ஆசியாவில் தனது நிலைமையை ஸ்திரப்படுத்திக்கொள்ள ராணுவ பலத்தை உபயோகப்படுத்துவதோடு, டச்சு, பிரஞ்சு சர்க்கார்களுக்கும், தேசிய இயக்கங்களுக்கும் இடையே சமாதானத்தை ஏற்படுத்தவும் முயற்சி செய்கிறது.

இந்தோ-சைனாவிலும், இந்தோனேஷியாவிலும் உள்ள மக்கள் பழைய ஏகாதிபத்திய ஆட்சியைத் திரும்பவும் தங்களுடைய நாடுகளில் நிலைநாட்டப்படுவதை ஒருகாலத்திலும் சகித்துக்கொண்டு வாளாவிருக்க மாட்டார்கள். தினே தினே அவர்களது எதிர்ப்பு வளர்ந்து, வலிமைபெற்றுக்கொண்டேயிருக்கிறது.

இந்தோனேஷிய சுதந்திர குடியரசின் தலைவர் டாக்டர் சுகர்னோ

## லீகர்களே!

### 'பிடிக்காவிட்டால் எழுந்து வந்துவிடவும்'

—ஜின்னா

சென்ற 30ம் தேதி யன்று அ. பி. நிருபருக்கு அளித்தப் பேட்டியில் காயிதே ஆஜம் முகமதலி ஜின்னா கீழ்க்கண்டவாறு கூறுகிறார்:

"சட்ட ரீதியாகவும், சமாதானமுறையிலும், வருகிற தேர்தலில் முஸ்லிம் லீக் போட்டியிட விரும்புகிறது. எந்தவிதமான தொல்லையுமில்லாது சுதந்திரமாக நேர்மையுடன் நடக்கும் தேர்தலில் பொதுஜன தீர்ப்பை பெற விரும்புகிறது.

"ஆதலின் முஸ்லிம்களை நான் வேண்டிக் கொள்கிறேன். உங்களுடைய எதிரிகள் சூழ்ச்சியில் சிக்கி சகோதரச் சண்டைகளை உண்டாக்காதீர்கள்"

மற்றக் கட்சியினர் போடும் கூட்டங்களில் தங்கள் மனதிற்கு பிடிக்காத வகையில் பிரசங்கங்கள் செய்யப்பட்டாலோ, அல்லது லீகை திட்டி பேசப்பட்டாலோ, கூட்டத்தை விட்டு சமாதான முறையில் எழுந்து வந்து விடுவதுதான் லீகர்கள் கடமை என்று அவர் கூறுகிறார்.

லீகர்கள் இதைக் கவனிப்பார்களா? சண்டை சச்சரவை ஒழிப்பார்களா?

# தோழர்களே! ஜீவமரணப் போராட்டம்!

## சேவையை நிரூபிப்போம்

(முதற் பக்கத் தொடர்ச்சி)

வாருங்கள். வரும்போது, எல்லா விஷயங்களிலும் எங்கள் கொள்கையை ஒத்துக்கொள்ளாமல், சந்தேகங்களைக் கொண்டிருக்கும் உங்களுடைய சகோதர கிராமவாசிகளையும் கூட்டங்களுக்கு அழைத்து வாருங்கள்.

- கூட்டம் முடிந்தவுடன் கிஸான் சபையில் அங்கத்தினராகச்சேருங்கள்.
- அந்த இடத்திலேயே உங்களால் என்ன கொடுக்கமுடியுமோ அதைக் கட்சி நிதிக்குக் கொடுங்கள். அறுவடையானதும் என்ன தரமுடியும் என்பதை கட்சி ஆர்கனைசரிடம் கூறுங்கள்.

★

### தாய்மார்களே! சகோதரிகளே!!

நாங்கள் இளைஞர்களாக இருக்கும்போது உங்களுக்கு ரொம்ப கஷ்டத்தைக் கொடுத்தோம். நாங்கள் ஜெயிலுக்குப் போன ஒவ்வொரு தடவையும், உங்களைக் கண்ணீர்விட்டு அழ விட்டோம். எங்களுடைய தோழர்கள் உங்களுடைய புத்திரர்கள்; சகோதரர்கள். உங்கள் வீட்டிற்காக அவர்கள் வேலை செய்யவில்லை என்று நினைத்து வருந்தினீர்கள். ஆனால் எல்லா தாய்மார்களுடைய, சகோதரிகளுடைய வீடாகிய இந்தியாவிற்காக அவர்கள் வேலை செய்வதனாலேயே, உங்கள் வீட்டிற்காக அவர்கள் வேலை செய்யவில்லை என்பதை உணர்ந்தவுடன், நீங்கள் எங்களுக்கு உற்சாகமூட்டி ஊக்கப்படுத்தினீர்கள்.

நாங்கள் தலைமறைவாக இருந்து வேலை செய்த காலத்தில் எங்களுக்காக மனமறிந்து எவ்வளவோ தியாகங்களை செய்தீர்கள்; அபாயகரமான காரியங்களை ஏற்றுக்கொண்டீர்கள். இதையெல்லாம் பார்த்த நாங்கள், "கட்சிக் குடும்பம்" என்ற வார்த்தைகளை ஒரு பெருமையாகக் கருதுகிறோம். கட்சியின் ஒவ்வொரு கிளையும் இந்த வார்த்தைகளால் பூரித்து பெருமையடைகின்றது. உங்களைப் போலவே தன் குடும்பமும் 'கட்சிக் குடும்ப'மாக வேண்டுமென்ற எண்ணம் கட்சி அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் ஆசையாகிவிட்டது. தன் தாய், சகோதரி, மனைவி முதலிய ஒவ்வொருவரையும் உங்களைப்போல் கட்சிக்குள் கொண்டுவருவதைத்தன் ஆசையாகக் கொண்டிருக்கிறான்.

மாதர்கள் வாழ்வில், கல்வியில் நம் கட்சி எவ்வளவு சிரத்தை எடுத்துக் கொள்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். மாதர் சங்கங்களை ஆரம்பிப்பதென்றால் ஒவ்வொரு கம்யூனிஸ்டு பெண்ணும் எத்தகைய துன்பங்களை அனுபவிக்கவேண்டியிருக்கிறது என்பதையும், எத்தகைய தியாகங்களை செய்யவேண்டியிருக்கிறதென்பதையும் நீங்கள் அறிவீர்கள்.

மாதர்கள் ஒடுக்கப்படுவதை எதிர்த்து நம் கட்சி எப்படி போராடுகிறது என்பதையும், ஒவ்வொரு வீட்டிலும் ஆண்களோடு தோளோடுதோள் நின்று புது வாழ்விற்காகப் போராட, தங்களைத் தாங்களே ஒன்றுதிரட்டிக் கொள்ள எவ்விதம் எங்கள் கட்சி மாதர்களுக்கு உதவி செய்கிறதென்பதையும் நீங்கள் அறிவீர்கள்.

நாங்கள் எங்கெங்கே பலமாக இருக்கிறோம் என்பதை நீங்களே நேரில் பார்த்திருக்கிறீர்கள். எங்கெங்கே பலஹீனமாக இருக்கிறோம் என்பதை உங்கள் புத்திரர்கள் சொல்லக் கேட்டிருப்பீர்கள்; கட்சிப் பத்திரிகைகளில் வரும் செய்திகளிலிருந்து அறிந்திருப்பீர்கள்.

கம்யூனிஸ்டு எதிர்ப்பாளர்கள் கூறும் அவதூறுகளிலிருந்து எந்த கம்யூனிஸ்டு பெண்ணும் தப்பவில்லை.

உங்களுடைய புத்திரர்கள்மீது, புத்திரிகள்மீது கேவலமான முறையில் அவதூறுகளைக் கூறும் நீசப்பிராணிகள் கம்யூனிஸ்டு எதிர்ப்பாளர்கள் என்பதை நாங்கள் அறிவோம். இப்பொழுது உங்களைக் கேட்கிறோம். குடும்ப வருமானத்திலிருந்து கட்சி நிதிக்கு பணம் கொடுங்கள். கட்சி குடும்பங்களெல்லாம் தங்கள் கோட்டாவை அறிவிக்கும்போது, நீங்களும் கொடுங்கள். எவ்வளவு கொடுக்கமுடியுமோ அவ்வளவையும் கொடுங்கள். உங்களுடைய சொந்த குடும்பத்தின் கௌரவத்திற்காக, உங்கள் புத்திர புத்திரிகள்மீதுள்ள அன்பினால், கட்சி நிதிக்குக் கொடுக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

★

### எழுத்தாளர்களே! அறிவாளிகளே!

மகாகவி வள்ளத்தோல், ஜோஷ் மஹிலபாடி, பந்த், நிரலா, தாராசங்கர், மனேக் பானர்ஜி போன்ற உன்னத கவிஞர்கள், எங்கள் கட்சி கொள்கையில் சில அம்சங்களில் அபிப்பிராயபேதப்பட்ட போதிலும் எங்கள் கட்சியின் நண்பர்கள் என்று தங்களைப் பெருமையுடன் கூறிக்கொள்கிறார்கள்.

வங்காள நாடக மேடைகளில் தலைசிறந்த நடிகர் மனோரஞ்சன் பட்டாசார்ஜி, சினிமா நடிகர்கள் சைகால், மோதிலால், ஜெயராஜ், கே. என். சிங், பங்கஜ் மல்லிக் இன்னும் பலரும் எங்கள் தோழர்கள் நடத்தும் கலாநிகழ்ச்சிகளைப் போற்றிப் புகழ்கிறதோடு, கட்சி நிதிக்கு ஏற்கனவேயே நன்கொடைகள் அளித்திருக்கின்றனர்.

முற்போக்கு எழுத்தாளர் இயக்கத்திற்கும் பொதுஜன கலாமண்டல இயக்கத்திற்கும் எங்கள் கட்சி உணர்ச்சியூட்டி, வளர்ச்சியடைய பேருதவி செய்திருக்கிறது. எங்களுடைய கொள்கையை ஒத்துக் கொண்டாலும், ஒத்துக் கொள்ளாவிட்டாலும், கலை முனையில் அதன் சாதனைகளை எல்லோரும் புகழ்கிறார்கள்.

நேர்மையான அறிவாளி ஒவ்வொருவரையும் நாங்கள் வேண்டிக் கொள்கிறோம். எங்களுடைய கட்சியில் சர்வ சாதாரணமான நன்னடத்தையையும், புதிய ஜனநாயகத்தையும், குன்றாத தேச பக்தியையும் பார்க்கிறீர்களல்லவா? இவை வளர வேண்டுமென்று விரும்புகிறீர்களா? அல்லது அழிய வேண்டுமென்று விரும்புகிறீர்களா? நீங்களே சிந்தித்துப்பாருங்கள்.

முன்பே நீங்கள் எங்களுடைய நண்பர்களா இருந்திருக்கிறீர்கள். இப்பொழுது உங்கள் நட்பை நாடுகிறோம். சாதாரண பாமர மக்களின் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் புதிய கலையை வளர்க்க உங்களுடைய நட்பையும் உதவியையும் வேண்டுகிறோம்.

நம் அரசியல் கட்சிகளிடையே ஏற்படும் அரசியல் ஒற்றுமையால் தான் ஏகாதிபத்தியத்தை விரட்ட முடியும் என்பதையும், நம் எல்லோருக்கும் பொதுவாக உள்ள லக்ஷியமாகிய இந்திய சுதந்திரத்தை அடைய முடியும் என்பதையும், நம் ஜனங்கள் எல்லோருக்கும் உணவு கிட்டுமென்பதையும், நம் சொந்த கலைகள் வளரும் என்பதையும் மேலும் மேலும் அறிவாளிகள் உணர்வார்களென்று நம்புகிறோம்.

எங்களுடைய தேர்தல் இயக்கத்தில் தங்களால் முடிந்த உதவியைச் செய்வதோடு, கட்சி நிதிக்கு நன்கொடை தரும்படி அவர்களை வேண்டிக்கொள்கிறோம்.

★

### தோழர்களே!

நம்முடைய மகா ஜனங்களின் பண்புக்கேற்ற புத்திர, புத்திரிகள் நாம் என்பதை நாம் நிரூபித்து நிலைநாட்ட வேண்டும்.

நாம் தேசபக்தர்கள்; ஒரு கட்சிக்கு எதிராக கட்சி கட்டிக் கொண்டு குருட்டு வாதத்தையே பிடித்துக்கொண்டு நிற்கும் தேசபக்தர்களைத்தான் இதுவரை நம்முடைய நாடு கண்டிருக்கிறது. அவர்களிடம் தீவிர தேசபக்தி யிருந்தாலும் நம்முடைய ஜனங்கள் இன்று காண்பது கட்சி பிரதிகட்சிச் சண்டைகள் தான். நாம் அத்தகைய தேசபக்தர்களல்ல, புதுவிதமான புனித தேச பக்தர்கள், பொதுநலத்தையே தன்னலமாகக் கொண்ட கட்சியைச் சேர்ந்தவர்கள், ஆதலால் கட்சியின் கௌரவமென்று பொது நலனைப் புறக்கணிக்கக் கூடியவர்களல்ல என்பதை நம்முடைய மக்களுக்கு நாம் நிரூபிக்க வேண்டும்.

நாம் புதுவிதமான அமைப்புத் திறன் படைத்த ஊழியர்கள், நம்முடைய செல்வாக்கு சொழித்தோங்குமேயன்றி மங்கிக் குன்றாது என்பதை நிரூபித்து நம்முடைய அமைப்புத் திறனை நிரூபிக்கவேண்டும்.

தோழர்களே! கட்சி நிதிக்கு நீங்களே பணம் தருவதும், பிறரிடம் சென்று, வசூலிப்பதும் சிறிய வேலையாகத் தோன்றலாம் ஆனால் கட்சியின்மீது சுமத்தப்படும் அபாண்ட புராணத்தைத் தகர்த்தெறியும் தேர்தல் பிரசாரத்தில் இந்த வேலை இன்றியமையாத அம்சம். நம்முடைய நாட்டு மக்களின் வாழ்க்கையில், நம்முடைய நாட்டின் எதிர்கால வாழ்க்கையில் புனிதமான புதியசக்தியாக, பரந்து மலர்ந்து பரவும் ஜீவசக்தியாக, நம்முடையகட்சி வளருவதற்கு இந்தப் பணி இன்றியமையாத பணியாகும். அடிமைத்தனத்தை உண்மையிலே அடி உள்ளத்திலிருந்து வெறுக்கும் எந்த மனிதனும், சுதந்திரத்திற்காக சுறுசுறுப்புடன், பாடுபடும் உணர்ச்சியுடைய உள்ளமுடையோன் யாரும், நம்முடைய கட்சி சொல்வதைக் கேட்கவேண்டுமானால், நம்முடைய கட்சியை நிராகரித்து உதாசினப்படுத்திவிடலாம் என்று எந்த தேசபக்தனும் நினைக்காதபடி செய்ய வேண்டுமென்றால், நீங்கள் இப்பணியைச் செய்து முடிக்கவேண்டும். நீங்கள் கட்சிக்குப் பணம் அளித்து உதவ வேண்டும்; பிறரிடமும் வசூலித்தாக வேண்டும்.

## படித்துப் பார்!

கம்யூனிஸ்ட் கட்சியை தினசரி சந்தர்ப்பவாதிகள் தூற்றி வருகின்றனர். சர்வதேசிய ரீதியில், தேசியரீதியில் நாங்கள் சொன்னதும் செய்ததும் என்ன என்பதை அறிய வேண்டுமானால் கீழ்க்கண்ட பிரசுரங்களைப் படியுங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | காந்தி ஜீ-ஜோஷி கடிதங்கள் | 0 | 8 | 0 |
| 2. | எந்தக் கட்சியில்? (ஸ்ரீ நேருவுக்கு கம்யூனிஸ்டுகளின் பதில்) | 0 | 3 | 0 |
| 3. | ஒப்பில்லாத சமுதாயம் (சோவியத் யூனியனைப் பற்றி டி. என். பிரிட், காண்டர்பாரி பாதிரியார் எழுதியது) | 0 | 8 | 0 |
| 4. | ரங்காவின் அரசியல் | 0 | 4 | 0 |
| 5. | உழவர் தோழன் | 0 | 6 | 0 |
| 6. | காங்கிரஸ்-லீக்-கம்யூனிஸ்டு ஐக்ய அணி | 0 | 0 | 6 |
| 7. | ஆறுகோடி தீண்டாதவர் (மூன்றாம் பதிப்பு) | 0 | 3 | 0 |

முன் பணம் அனுப்பிப் பெற்றுக்கொள்ளவும்.

ஜனசக்தி பிரசுராலயம்,
1/6, டேவிட்ஸன் தெரு,
ஜி. டி. சென்னை.

(11-ம் பக்க தொடர்ச்சி)

தவிர்க்க, துடிதுடித்த கம்யூனிஸ்டுகள், உள்நாட்டுக் கலகத்தை ஆரம்பித்திருக்கிறார்களென்ற பொய்ப் பிரசாரத்தை உலக மக்கள் நம்பவே மாட்டார்கள்.

"சைனாவில் பல பகுதிகளில் போராட்டங்கள் நடந்தபோதிலும், சியாங்கே-ஷேக் பகிரங்கமாகஇதை உள்நாட்டு கலகம் என்றும், கம்யூனிஸ்டுகள் கலகக்காரர்கள் என்றும் ஸ்பஷ்டமாக கூறுவது வரையிலும், இப்பொழுதைய நெருக்கடியான நிலைமையை உள்நாட்டு கலகமென்று கருத முடியாது" என்றார் ஒரு கம்யூனிஸ்டு பிரமுகர். எனவே, உள்நாட்டுக் கலகத்தை தடுக்கமுடியும், தவிர்க்கத்தான் வேண்டும். ஆனால், சீன ஜனநாயக லீகின் தலைவரான சாங்லான் கூறுவதுபோல் ஏககட்சி சர்வாதிகாரம் நிலைத்திருப்பதுவரையிலும் கோமிண்டாங்-கம்யூனிஸ்டுகள் ஸ்தம்பிப்பை முறிக்கவே முடியாது. ஜனநாயக முறையில், சகல கட்சிகளையும் உட்கொண்ட கூட்டு சர்க்கார் ஏற்பட்டால் தான், சைனாவை உருகுலைத்துவரும் பிற்போக்காளர்களை அறவே ஒழிக்க முடியும்.

Edited, Printed and Published by P. RAMAMURTHI at the "Janasakthi" Press, 1/6, Davidson Street, G. T. Madras. Regd. No. M. 4514